# என்னுரை

எனக்குத் தமிழ் இலக்கியத்தைப் பயிற்றுவித்ததோடு, வைணவச் சமய தத்துவத்தையும், வைணவச் சமய இலக்கியங்களையும் போதித் தருளிய என தருமை ஆசான் பேராசிரியர். பொன். சௌரிராசனார் எம். ஏ., பிஎச்.டி., பட்டயம் மொழியல் அவர்களுக்கும்,

என்னை உடன் பிறந்தோனாகக் கருதாது, பெற்ற மகனாக எண்ணி இளமை தொட்டு இன்று வரை வளர்த்து ஆளாக்கி, தமிழுலகிற்கு என்னை அறிமுகப்படுத்திய என் தமையனார் திரு. கோவி. அரங்கநாதன் ஆசிரியர் மற்றும் அண்ணியார் திருமதி இலக்குமி அரங்கநாதன் அவர்களுக்கும் எற்றைக்கும் ஏழேழ் பிறவிக்கும் நன்றி கடப்பாடுடையேன்.

இந்நூலினைத் தமிழாக்கம் செய்ய உற்சாகமூட்டிய எம் துறைப் பேராசிரியர் கொலகலூரி இனாக் அவர்களுக்கும், சிரமம் கருதாது மொழிபெயர்ப்பின் துவக்கத்தில் உதவி புரிந்த தெலுங்கு மொழித்துறை முனைவர் பட்ட ஆய்வு மாணவி செல்வி கே. ஸ்ரீ லக்ஷ்மி அவர்களுக்கும், அதற்குப் பிறகு இறுதிவரை மொழிபெயர்ப்பில் உறுதுணையாய் இருந்த அன்பு மாணவர், தெலுங்கு மொழித்துறை முனைவர் பட்ட ஆய்வாளர் திரு. ஷேக். ஷமிவுல்லா அவர்களுக்கும் என் நன்றி என்றும் உரித்ததாகும்.

நன்றியுடன்

**கோவி. நரசிம்மன்**

**நாடக உறுப்பினர்கள்**

1. திருப்பாணாழ்வார்
2. உலோக சாரங்கமுனி
3. திருவரங்கநாதன்
4. வேத வேத்தியன்
5. தேவதத்தன்

**நாடக வடிவம்**

1. முதல் அங்கம் : திருவரங்கம் கோயில் வாயிற்படி
2. இரண்டாம் அங்கம் : காவேரி நதிக்கரை
3. மூன்றாம் அங்கம் : முதல் களம் காவேரி நதிக்கரை இரண்டாம் களம் திருவரங்கம் கோயில்
4. நான்காம் அங்கம் : முதல் களம் திருவரங்கம் கோயில்வாயிற்படி இரண்டாம் களம் உலோக சாரங்கமுனி படுக்கையறை
5. ஐந்தாம் அங்கம் : முதல் களம் காவேரி நதிக்கரை இரண்டாம் களம் திருவரங்கம் கோயில்.

## திருப்பாணாழ்வார்

நடத்துநர் : (திரை மறைவு)

நாரியோன் அமைதியோன் நன்மை புரிவோன் தீமை யழிப்போன் தர்மத்தின் தலைவன் உலோகசாரங்க முனியை வாகனமாகப் பெற்றவன் ஸ்ரீ விஷ்ணு உங்களைக் காப்பாற்று வானாக.

நடத்துநர் : (நுழைதல் - திரையை நோக்கி) தேவி !

நாடகப் பெண்மணி : (திரைக்குள்) ஐயா !

நடத்துநர் : ஒரு முறை இங்கே வா !

நாடகப் பெண்மணி : (உள்ளே வந்து) ஐயா ! என்ன ?

நடத்துநர் : மதிப்புற்குரியீர் ! இந்த அழகான வசந்தகாலத்தைப் பற்றி ஒரு பாட்டுப் பாடுவீராக

நாடகப் பெண்மணி : சரி ஐயா, (அவள் பாட்டுப் பாடுகின்றாள்)

நடத்துநர் : இந்தக் காலத்தில் 'மாவிலைக் குருத்தை விருப்போடு தின்று குரலுயர்த்திப் பாடிய குயிலே!' (திரை மறைவில் ஐயா, ஐயா...)

நடத்துநர் : (குரல் கேட்டு) ஆமாம் ஆமாம் புரிந்துவிட்டது. ''பாணன் திருப்பாணன் உலகம் திரிந்து கவிச் சமுத்திரத்தில் இனிய கவிதைகளைக் கரை சேர்த்தது போல'' (இருவரும் வெளியேறல்)

## முதல் அங்கம்

இடம் : திருவரங்கம் கோயில் - வாயிற்படி - திருப் பாணாழ்வார் பத்மாசனம் போட்டு அமர்ந்திருத்தல்

திரு : சரியடா அரங்கநாதா சத்திய வாக்கியம் சொல்லுடா ! முகமிருக்கும் அடியிருக்கும் முக்தி எனக்கு அளிப்பாயா ? கடல் வண்ணா ! பேச்சு மூச்சு இல்லையே ! இலக்குமிநாதா என்னைக் கண்ணால் காணாயோ ! இதயம் முழுவதும் வெள்ளிநிலா காயுது தெரிந்துகொள். சரியாடா பெரிய துரையே இதய என்ணத்தை த்தீர்ப்பாயாக (சரியடா)

உன்னை நினைத்தாலும், பேரைக் கேட்டாலும்,

பேசினாலும் இதய எண்ணங்கள் தீருமா ?
உன் பெயர், உன் உருவம் பற்றி வான் நிறைய பாடவா ?
நீ எனக்கு, நான் உனக்கு என நினைத்து ஆடவா ?
சொல் தந்தையே !
மகிழ்ச்சியோடு உன் சந்நிதியில் வாழடடுமா? (சரியடா)

(திரைக்குள் திருவரங்கம் கோயில் மணி ஒலித்தல்)

வேத : தேவ தத்தா ! திருப்பாணன் பாடிய பாடல் உன் காதில் விழுந்ததா ?

தேவ : வெள்ளிய மலரோடு, தண்ணிய அலைகளோடு, பூந்தோட்டங்களின் வாசனையோடு, உலகத்தில் விந்தையான செய்தியோடு அதோ காவேரி ! நிலமகளின்,

வேத : பக்தி நிறைந்த அந்தக் குயிலின் பஞ்சமசுரம் என்னை மெய்மறக்கச் செய்தது. உங்களை ?

தேவ : திருவரங்கம் தலையில் மல்லிப்பூ மாலை போன்று அமைந்துள்ளது. திருவரங்கனின் இனிமையாலும் கருணையாலும் இதயத்தில் அமைந்த மேடை. இது சொர்க்கத்திற்கும் நரகத்திற்கும் இடையே அமைந்த பாலம். தெய்வத்திற்கும் மனிதனுக்கும் இடையே அமைந்த ஏணி.

வேத : திருப்பாணன் பக்திப் பரவசம் மிக உயர்ந்தது. அனைத்தையும் விட நல்லது.

தேவ : கோபுரத்தைப் பார் வேதவேத்தியா ! அது காவேரி நதியில் பிரதிபலிக்கின்றது ! ஆகாய கங்கையின் அலைகள் போன்று அமைந்துள்ளது.

வேத : நீ திருப்பாணனைப் பார்த்தாயா ? அவன் பாடும் பாட்டைக் கேட்டாயா ?

தேவ : நீ உணர்த்தும் பொருளை அறிந்து கொண்டேன். பிரம்ம தத்துவத்தைத் தெரிந்து கொண்டேன் - இன்பத்திற்கும் துன்பத்திற்கும் இடைநிலையை அறிந்து கொண்டேன்.

வேத : நல்லது. இனிமையாகப் பாடும் கவிஞனைக் காணவில்லையா ?

தேவ : இனிமையாகப் பாடும் கவிஞன் யார் ?

வேத : திருப்பாணன். அவன் மகாக்கவி மட்டுமல்ல, பக்த சிரோமணியும் கூட.

தேவ : எவ்வளவு பெரிய வார்த்தை ? எவ்வளவு பெரிய வார்த்தை ! பஞ்சமன் ஒரு மஹாபக்தனா ? ஒரு மகாக்கவியா ? வேதவேத்தியா ! சொல்லாத ஒரு சொல்லைச் சொல்லிவிட்டாய், நானும் அதைக் கேட்டுவிட்டேன். இதைவிட அமங்கலமான வார்த்தை வேறு உண்டா ?

வேத : அஞ்சும் எட்டும் அறியாதவன், இனிமையாகப் பாடும் கவிஞன். சரியாகச் சரிகம தெரியாதவன், தீண்டத்தகாதவன் ஒரு பெரிய கவி. ஸ்ரீ ரங்கநாதனைப் பார்க்காமல் பார்த்தவன், தீண்டத்தகாதவன் மதுரகவி, இவை தெய்வ லீலை அல்லவா தேவதத்தா ?

தேவ : அது பாட்டா ? அதற்கு ஒரு இனிமையுண்டா ? அதற்குச் சுரம் இருக்கிறதா ?

வேத : அதற்கென்ன குறை. அது நல்ல ஸ்வரம், பஞ்ம ஸ்வரம்.

தேவ : பஞ்சமனின் ஸ்வரம் - சரி.

வேத : ஆமாம் அது பஞ்சமுனியின் ஸ்வரம், அந்தப் பக்தி மகரிஷிகளின் பக்திப் பரவஸ்யம்.

தேவ : பஞ்சமன் பக்தன்- மேலும் பரவசியமானவன். சொல்லுவதற்கு உனக்கு எதுவும் இல்லை யானாலும் கேட்பதற்கு எனக்குப் போதிய அறிவில்லையா ?

வேத : திருப்பாணன் பாடல்களையெல்லாம் எழுதி வைத்தால் நல்லதல்லவா ?

தேவ : அபசாரம். இது எதிர்காலத்தின் சாபம். அது எழுதுவதற்கு இயலாத எழுத்து, ஏட்டில் எழுதாத கவிதை, எழுத்தில்லாத பாடல், யார் எழுதுவார் ? எதற்காக எழுத வேணடும். வெறும் பாட்டு, காற்றுக்குப் போக வேண்டியதே.

வேத : கவிதையையே தவமாகக் கொண்டு கடவுளின் கடாட்சத்தை நொக்கி நிரந்தர பக்தனாக ஒரே நிலையில் தீட்சை பெறுபவனைப் பஞ்சமன் என்னும்

பேரில் வேறுசெய்தால் தேசத்தின் எதிர்காலம் என்னாவது ?

தேவ : இந்த அமைதியான ஜாலங்களெல்லாம் மாறிக் கொண்டே போகுது. தர்ம நியதிகள் எல்லாம் துவேஷிக்கப்படுகின்றன. தெய்வமே தீண்டத் தகாததானால் சொர்க்க சுகங்கள் எல்லாம் நரகத்தின் அருகே செல்வதற்கு ஒப்பாகும். உலோக சாரங்கமுனி குளித்து முடித்து, காவேரி புண்ணிய தீர்த்தம் எடுத்துக் கொண்டு இதோ வந்து கொண்டு இருக்கின்றார்.

வேத : அவருக்கு எதற்கு இந்தக் கஷ்டம் ? நீங்கள் எடுத்து வரக்கூடாதா ?

தேவ : எடுத்து வருவதால் என்ன பயன் ? எடுத்து வருவதற்கு உரிய தகுதி இருந்தால் புண்ணியமாகும்.

வேத : உனக்குத் தருமமா ?

தேவ : அவரே சரியான மனிதன்

வேத : உனக் கென்ன ?

தேவ : அந்த அளவு மனத் தூய்மை எனக்கு எங்கே உள்ளது ? தெய்வ காரியங்களை அவரே பொறுப் பேற்று நடத்துவார் !

வேத : ஒவ்வோரு நாளும் அரங்கனை தரிசிப்பவர்ளாகிய உங்கள் குருவானவர் மிகவும் புண்ணியம் செய்தவர். அவரின் சீடராகிய நீங்கள் அதிஷ்ட சாலிகள்.

தேவ : என் நண்பராகிய நீங்கள் கூட அதிஷ்டகாரர். எங்கள் குருவின் பாடலின் இனிமை தங்களுக்கும் தெரியுமல்லவா ? ஆஹா ! அமிழ்த இனிமை.

வேத : அவ்வளவு இனிமையான பாட்டா ? கண்டிப்பாகக் கேட்கவேண்டியதுதான்.

தேவ : அந்த இனிமையான பாடலின் அழகில் நீங்களும் மூழ்கலாம். இன்று காலை கூட புண்ணிய நதியான காவேரி நதியில் திருவரங்கனைக் குளிப்பாட்டிக் கொண்டு பாடிய பாடலைக் கேட்டவர்கள் கொடுத்து

வைத்தவர்களாவர். அவரின் முகத்தோற்றம் திருவரங்கனின் தூய்மையை விளக்குவனவாக அமைந்துள்ளது.

வேத : தங்கள் குரு கூட திருவரங்கனின் தூய்மையான பாதத்தைப் பொருந்து வாரா ?

தேவ : ஆமாம் ! ஆமாம் !!

வேத : சகல உலகங்களின் படைப்பிற்குக் காரணமான ஸ்ரீ விஷ்ணுமூர்த்தியை. . . .

தேவ : உலோக சாரங்கமுனி பவித்திரமாக ஆக்குவாரா ?

வேத : உலக உயிர்களின் காப்பாளரான- அவதாரப் புருடரான -

தேவ : இந்தக் கோயிலில் இப்படிப்பட்டவரைக் காப்பாற்றுவது எங்களுடைய வேலை.

வேத : உலக உயிர்களின் ஆன்மாக்களுக்கு ஆன்மாவாக விளங்கும் ஸ்ரீ இலக்குமி நாராயணனைக் கூடவா ?

தேவ : ஆமாம், நாங்களே -

வேத : தேவதத்தா ! பார் இந்த விசித்திரமான வாழ்க்கையை புத்தி கெட்டு, கவனம் மாறி கண்ணிற்குப் பதிலாகக் கண்ணிரப்பையைப் பார்க்கும் காலம். இந்த மாதிரி ஒரு கஷ்டகாலம் பூமிமீது கால் வைத்துள்ளது.

தேவ : வேத வேத்தியனே ! உன்னைப் புத்தியுள்ளவனாக மாற்றுவதற்கு நாங்கள் படும் கஷ்டம் உனக்குத் தெரியாது. இமை யில்லாத கண், இவ்வுலகில் இல்லை ஆகவே இமை, கண்ணுக்குப் பாதுகாப்பானது.

வேத : கண் முக்கியமா ? இமை முக்கியமா ?

தேவ : இமையில்லாத கண் இவ்வுலகில் வுண்டா ? (உலோக சாரங்கமுனி உள்ளே நுழைதல்)

உலோ : தேவதத்தா அங்கே பத்மாசனம் போட்டு அமர்ந்துள்ளது யார் ?

தேவ : சுவாமி, ஐந்தாவது இனத்தைச் சார்ந்தவன்; பேர்

வைத்து அழைக்கக் கூடாதவன்.

வேத : திருப்பாணன்

உலோ : இது யார் ?

தேவ : என் நண்பன்.

உலோ : இங்கு வரக் காரணம் என்ன ?

வேத : பக்தியில் தோன்றிய ஆனந்தத்திற்காக.

உலோ : உன்னை இல்லை.

வேத : எனக்கிலலை, திருப்பாணனுக்கே

தேவ : இல்லை. . விதிக்கு மாறாக

உலோ : எதற்காக அவனை இங்கு வரவழைத்தாய்

வேத : நானாக வந்தேன்

உலோ : உன்னை இல்லை

தேவ : நாங்கள் வருவதற்கு முன்பே வந்துவிட்டான்

உலோ : வழியில் உட்காரக் கூடாது எனச் சொல்லி அனுப்பி வைக்கக் கூடாதா ?

வேத : பக்தியின் இனிமையைப் பாட்டாகப் பாடி கேட்பதற்கு இனிமையாகப் பாடி உலகை மெய்மறக்கச் செய்து தியான நிஷ்டையினால் இந்த உலகத்தை மெய் மறந்தவர் திருப்பாணன்.

உலோ : (பரிகாசமாக) தியானம் . . . நிஷ்டை - எழுப்பி - அவனை அனுப்பி வையுங்கள்.

தேவ : உறக்கத்தின் மயக்கமாக இருக்கலாம்

வேத : இல்லை, தியான நிஷ்டையாகும்.

தேவ : ஏதோ, அழியற நிஷ்டை, எப்படி போவெனக் கூருவது, கன்ஜாடை பயன்படாது; அவனுக்குக் கண்ணில்லை (கண்களை மூடியிருக்கின்றான்) அழைக்கக் கூடாத பேர்; அதனால் என்னால் கூப்பிட முடியாது. தொட்டு விழிக்கச் செய்தல் கூடாது; பஞ்சமனைத் தொட்ட பாவம் வந்து சேரும். என்ன செய்வது ? அடேய் அடேய் -

வேத : திருப்பாணா . . . . திருப்பாணா (திருப்பாணண் கண் திறந்து பார்த்தால்)

திரு : சரியடா அரங்கநாதா !. . . சரியடா அரங்கநாதா !!·

உலோ : நீ இங்கே வரக்கூடாது: தெரியுமா ? எதற்காக வந்தாய் ?

திரு : என் அரங்கநாதன் ! ஸ்ரீ ரங்கநாதன் ! காவேரி அரங்கன் என் அரங்கனுக்காக, நான் எதிர்பார்த்துக் கொண்டு இருக்கின்றேன்.

உலோ : இந்தக் கோரிக்கை தீராதென உனக்குத் தெரியுமல்லவா ?

திரு : எப்போதாவது உங்களுக்குக் கருணை ஏற்படுமல்லவா ? நான் கோயிலுக்கு வர அனுமதி கிடைக்கு மல்லவா ?

உலோ : அந்த நாள் இப்போதில்லை; எந்த நாளோ எனக்குத் தெரியாது; உனக்கும் தெரியாது; ஸ்ரீரங்கநாதனுக்கும் தெரியாது.

திரு : அந்தநாள், என்றைக்காவது ஒரு நாள் என எனக்குத் தெரியும், உங்களுக்கும் தெரியும், என் அரங்கனுக்கும் தெரியும்.

உலோ : அந்த நாள் வரை காத்திருக்காமல் இவ்வளவு ஆத்திரம் எதற்கு ? கோபுரத்தில் புறவாயிலை நீ தொட்டு அசிங்கப் படுத்துவது எதற்கு ? அசுத்தப் படுத்தலாமா ?

திரு : சுவாமி ! இதுகூட அசுத்தமா ? இது ஒவ்வொரு நாளும் இயல்பாக நடப்பது இல்லையா ? நான் கோயில் சுற்றுதல் கூட நாள்தோறும் செய்யும் வேலை யல்லவா ?

உலோ : கோயிலைச் சுற்றினால் பரவாயில்லை. பத்மாசனமே ! இதுவரை கோயிலைச் சுற்றியுள்ள பகுதியில் மட்டுமே உன் பாதம் பட்டு வந்தது. இப்போது உன் தொடைபாகம் கூடப் பட்டு விட்டதே !

திரு : நான் திரியாத இடத்தில் உட்காரவில்லையே ! உங்கள் அனுமதியை மீறி நான் ஒன்றும் செய்யவில்லையே ! கோயிலுக்குள் வந்தேனா ? என் திருவரங்கனைப்

பாத்தேனா ?

உலோ : இனிமேல் இங்கே உட்காரக் கூடாது. உடனே எழுந்து போ.

திரு : யாசிப்பவனைப் போவென்று சொல்வது நியாயமா ?

உலோ : என்ன ?

திரு : என் சுவாமியைத் தரிசனம் செய்ய எனக்கு அனுமதி கொடுங்கள். என் திருவரங்கனை வழிபட அனுமதி கொடுங்கள். என் கடவுளின் பாதம் தொட்டு. . .

உலோ : அது முடியாது.

திரு : சுவாமி என்னை விலக்க வேண்டாம்; அனுமதி கொடுங்கள்.

உலோ : அனுமதி கொடுக்கும் அதிகாரம் எனக்கு இல்லை; அதைப் பெற்றுக் கொள்ளும் பாக்கியமும் உனக்கு இல்லை.

திரு : என் தந்தையைக் கண்ணுக்கு விருந்தாக. . .

உலோ : பார்க்கக் கூடாது.

திரு : சுவாமி, என்னை உள்ளே போக அனுமதி கொடுங்கள்.

உலோ : அது முடியாது.

திரு : என்னுடைய தீவிரமான கோரிக்கை என்னைப் பீடிக்கின்றது. உங்களுடைய கருணை எனக்கு மார்கம்.

உலோ : பஞ்சமனின் பாதத் தூசினால் இந்தப் பவித்திரமானப் பகுதி அசுத்தப்படக் கூடாது. அதனால் உன்னை உள்ளே அனுப்ப மாட்டேன்.

திரு : என்னுடைய தவம் ?

உலோ : எனக்கு அதைப்பற்றியெல்லாம் தெரியாது

திரு : மகாமுனிவரே, என்னை எப்படியாவது உள்ளே அனுப்புங்கள்.

உலோ : உன்னால் உள்ளே போகமுடியாது. உன்னை நிறுத்தும் ஆற்றல் எனக்குண்டு. இது எனக்குச் சாதாரண செயல்.

திரு : ஆனால் உள்ளே போவது என்னால் முடியாத காரியமில்லை. என்னை யாரும் நிறுத்தவும் முடியாது. என் அரங்கநாதன் வாவென்று அழைத்தால் என்னை நிறுத்துவார் யார் ? இருந்தும் உன் அனுமதியைக் கேட்கின்றேன்.

உலோ : இது பவித்திரமான காவிரி நீரால் நாளும் அபிஷேகம் செய்யும் புண்ணியமான திருக்கோயில். ஸ்ரீ மஹாவிஷ்ணு படுத்துறங்கும் ஸ்ரீ வைகுண்டம், இது உலோகசாரங்கமுனிவரின் மனம், வாக்கு, மெய்யால் ஆராதனை செய்த தூய சத்துவ வடிவமாகும். உன் கோரிக்கையினால் இந்தப் புண்ணியமான இடம் கெட்டுவிட்டது. நீ நாடோறும் இந்தக் கோயிலைச் சுற்றுவதால் இன்னும் அதிகமாக மாசுபட்டு விட்டது. எவ்வளவுதான் பாலும் நீரும் ஊற்றி அபிஷேகம் செய்தாலும் அந்த மாசு நீங்கவில்லை. இனிமேல் நீ போடும் இந்தப் பத்மாசனத்தினால் உன் கடவுளை அவமதிப்பதற்கு ஒப்பாகும். நீ கோயிலின் உள்ளே வந்தால் சர்வநாசத்திற்குக் காரணமாகும். பச்சைப் பசேலென்று இருக்கும் இந்தத் திருவரங்கம் உன்னால் மயானமாம் என்பதில் ஐயமில்லை. நீ பிறந்து வளர்ந்து அன்புடையவனாகப் பூஜை செய்த திருவரங்கம், காவேரி நதி, சுவாமி திருக்கோயில் உன் இதயக் கோயில் பிரளயக் காலத்தில் சிதறிப் போகும் எனும் செய்தியை உன்னால் தாங்கமுடியுமா ? அதை எங்களால் காணமுடியுமா ? நாம் உயிரோடு இருப்போமா ? இந்தக் கோயிலின் உள்ளே திருவரங்கன் வந்து இருப்பாரா ?

திரு : சுவாமி, நான் உன்னோடு பேசவல்லேன் அல்லன்; உனக்கு உரிய சமாதானம் என்னால் கூற முடியாது. என் இதயத்திற்கு உரிய பதிலைக் கூற-முடியாதவனாகினேன். நான் உங்களைக் கையாலாகதவன் எனக் கூறவில்லை. என் தந்தையான திருவரங்கனைப் பார்க்காமல் என்னால்

இருக்க முடியாது. நான் என்ன செய்வேன் ? எனக்கு இதுவா கதி ! எனக்கு விதி இப்படியா வந்து வாய்ப்பது.

உலோ : நாள் தோறும் கோயிலைச் சுற்றுவதே வழி.

திரு : கண்ணில் ஒளியைப் பெருக்கி இதய அன்பை வெளிப்படுத்தும் என் வெண்ணிலவைப் போன்ற தலைவனே ! நீ உலகம் ஒளிபெற்று விளங்க அடிப்படையானவன் தூய தங்கம் அளக்கும் சுரங்கமானவன் மானிட குப்பையை ஒப்பானவன். என் இறைவனே ! கண்ணனே !! தேவர்களுக்குத் தலைவனே ! இத்தகு இயல்பு பொருந்திய உனக்கே என்மீது வெறுப்பு யென்றால் என்னால் என்ன செய்யவியலும் எனக்கு இதுவா நீ கொடுத்த பிச்சை.

உலோ : தர்மம் மறைய ஆரம்பித்து விட்டது. அதர்மம் சிம்மாசனத்தில் அமர்ந்து ஆட்சி செய்யத் துவங்கி விட்டது. பரந்த நினைவு பரந்த அறிவு இனி பயன்படாது. குலபேதங்கள் அதிகமாகி விட்டன. எதிர்காலம் எவ்வாறு மாறப் போகின்றதோ ? தேவனே ! ஸ்ரீ ரங்கனே, என்னே உன் மாயை ? என்ன இந்த வேதனை ?

திரு : தட தட என நீர் ஓடுகின்றது
கல கல எனக் குடம் நிறைகின்றது

தேவ : உலோக சாரங்கமுனியின் நியம நிஷ்டைகள் புரியுதா ?

வேத : திருப்பாணாழ்வார் பக்தியின் வலிமையைக் கவனித்தாய் அல்லவா ? பக்தியின் வடிவாக அமைந்தவனின் முக்தியே உலகின் விலாச முத்திரையாகும். திருப்பாணான் முகத்தில் சாந்தியை நிறுத்தியுள்ளது அந்தசக்தி

தேவ : ஆமாம் இல்லை எனக் கூறவியலாதவன் அவன் இருண்ட முகத்தில் நீ சோதனை செய்து என்ன சாந்த ரசத்தை அறிந்து கொண்டாய். எனக்கும் அதைக்

காட்டி மகிழ்வாயாக. எனக்குச் சிரிப்பு வர, வெட்கப்படுகின்றது

வேத : உனக்குச் சிரிப்புதான் வரும்; அந்த சக்தி உனக்குத் தெரியாது.

தேவ : கோயிலைச் சுற்றுதல் மறுபடியும் தொடங்கி விட்டதே ?

வேத : அதோ, பாட்டுக் கூட பாட ஆரம்பித்து விட்டான். (திரையில்)

**பல்லவி**

திரு : தட தட என நீர் ஓடுகின்றது
கல கல எனக் குடம் நிறைகின்றது

**சரணம்**

அரங்கனின் உடலின்மீது நீரலைகள்
தேவர்கள் அனைவரும் பரவச யுயிர்கள்
அரங்கனின் இதயம் விட்டுவிட்டு ஒளிர்கின்றது
உலகமே தொட்டில் போன்று அசைகின்றது
(பல்லவி)
அரங்கனின் தலைமேலே தண்ணீர்
பூதேவியின் அழகான ஆட்டம்
அரங்கனின் பாதத்தில் தண்ணீர்
பூதேவியின் உடலில் மகிழ்ச்சி (பல்லவி)

**(திரை)**

## இரண்டாம் அங்கம்

இடம் : கவேரி நதி : திருப்பாணன் தவநிலையில் அமர்ந்திருத்தல்

திரு : நீ எனக்குக் கடவுள் என்று
நான் உனக்குப் பக்தன் என்று
உனக்கும் தெரியும் எனக்கும் தெரியும்
இந்த உலகத்திற்கு என்ன தெரியும் ?
உன் உருவம் உன் ஒளி

உன்னை உன்னை என்னுள்ளே
என்னை என்னை உன்னுள்ளே
நிருத்தி விட்ட நீதி க்கதை (பல்லவி)
உன் பாதத்தில் என் சிரசு
நிரந்தரமாக அனைவரும் அறிந்த உண்மை
உன் அடிகளுக்கு இதயக் கதவுகள்
திறந்து உள்ளது தெரிந்துகொள் (பல்லவி)
கோயில் அடிமை நீ
பக்தி கைதி நான்
நீ என்னைச் சேரமாட்டாய்
என்னைக் கோயிலில் அனுமதிக்கார் (பல்லவி)

வேத : பாட்டு முடிந்து, தியானம் ஆரம்பித்து விட்டது. ஆன்மாவின் செயல் அது.

தேவ : சும்மாயிரு. ஆன்மாவின் செயலும் இல்லை; ஒன்றுமில்லை. அதோ அபிஷேக நீர் - உலோக சாரங்கமுனி கொண்டு வருகின்றார். என்ன அழகு ?

வேத : அபிஷேகத்திற்கு உரிய நீர் அளிப்பதற்காக, குதிரை போன்று வேகமாகச் சென்று பாறைமீது மோதி, வேறொரு இடத்தில் குதித்து நகைத்து, நாட்டியமாடிக் கொண்டு, இந்தப்பக்கமும் அந்தப் பக்கமும் தலையசைத்து லீலைகள் செய்து கொண்டு காவேரில் பெண் வருகின்றாள் பார்த்தாயா ? பூசை செய்வதால் ஏற்படும் புண்ணியத்திற்காக எவ்வளவு அவசரப் படுகின்றாள் இந்தப் புண்ணியவதியான காவேரி நதி.

தேவ : ஆமாம் இந்தப் புண்ணியப் பெண் (காவேரி நதி) திருவரங்கனின் பாதத்தைத் தொடு வதற்குக் கோயில் மதிற்சுவரைத் தொடர்ந்து வருவதைப் பார்த்தாயா, அந்த நதியின் உற்சாகமே உற்சாகம்.

வேத : நதிக்கே இவ்வளவு வேகம் என்றால் பக்தனுக்கு எவ்வளவு வேகம் இருக்கும்.

தேவ : எவ்வளவு வேகம் அல்லது ஆசையாக இருந்தாலும் கோயில் மதில்சுவரைத் தொட்டு திரும்பிச் செல்வதன்றிக் கோயிலுக்குள் நுழைவதில்லை இல்லையா ?

வேத : ஆர்பாட்டம் அதிகமானால் காவிரி நதி அமைதியாக இருக்குமா ? வெள்ளம் வந்து கோயிலை மூழ்கடிக்கும்; அதுவே அபிஷேகம் ஆகும்.

**(உலேக சாரங்கமுனி உள்ளே நுழைதல்)**

உலோ : பவித்திரத் தன்மையைக் காப்பாற்றுவதற்காகக் காவேரியின் இரு கரைகளும் இரு கரங்களாக அமைந்துள்ளன.

தேவ : அவை இரண்டும் பஞ்சமுனியான திருப்பாணனை இங்கு வரவேண்டாம் என உரைக்கும் கரைகளாகும்.

வேத : சோறு போடுவதற்கும் ஆசீர்வதிப்பதற்கும் வரவேற்பதற்கும் கைகள் இருக்கின்றன. காவேரி நதியின் இருபுறங்களும் எப்போதும் மகரிஷிகளை வரவேற்றுக் கொண்டே இருக்கும். அது உலோக சாரங்கமுனியைப் போன்று திருப்பாணனையும் வரவேற் கின்றது.

தேவ : கைகளா ? அவற்றின் தொழில் வேறு. இந்தப் பக்கம் வரவேற்கின்றது. அதுவேயன்றி இந்தப் பக்கம் கௌரவம் அந்தப்பக்கம் அகௌரவம். இந்த இரண்டு கரைகளும் முனிவர்களுக்கு வரவேற்பு அளிக்கும் ஒளி பொருந்திய சிகரங்கள்

வேத : அந்த நதி சாதாரணமாகப் பொங்கி வழிகின்றது. அது அமைதியாக ஆரவாரம் இல்லாது பாய்கின்றது. கவேரி நதி திருப்பாணரை வர வேண்டாம் என மறுப்பதில்லை. தாயின் கைகளில் இருக்கும் குழந்தையைப் போன்று திருப்பாணன் வாழ்க்கை ஆடலும் பாடலும் நிறைந்ததாகும். மௌனமே சின்னம், பாடலே தவம்; தவமே பாடலாகும்.

தேவ : சாதாரணமாக உட்காரும் இடத்தில் உட்காராமல் ஒவ்வொரு நாளும் ஒவ்வொரு இடத்தை மாற்றுகின்றானே. என்ன சித்தி ! என்ன புத்தி !! அது ஒரு வெறி-போகட்டும் விடு. அவருடைய செயலே அவருக்கு ஆனந்தம்; அதனால் உனக்கு என்ன கவலை ?

வேத : பாடல் தியானத்தால் தோன்றியதா ! தியானம் பாடலின் ஒரு பகுதியா ! என்னவோ. ஆனால் திருப்பாணன் பாடினாலும் நடந்தாலும் அவனுக்கு நினைவிருப்பதில்லை. பாட்டு நின்றதென்றால் தியானத் துவக்கமே. திருப்பாணான் ஜீவ முக்தி பெற்றவன்.

உலோ : வேதவேத்தியா அது இயலும் காரியமா ? ஜீவன் முக்தி பெறுவது, புண்ணியம் பழுத்தாலும் பூர்வஜன்ம தவவலிமையாலும் அல்லவா ? எல்லோராலும் அது இயலும் காரியமா ?

வேத : முனிவரே ! திருப்பாணன் தியானநிலையைப் பார்த்தீர்களா ? முகத்தின் ஒளி அலங்காரமாகத் தெரிகிறது அல்லவா ?

உலோ : ஒளி தோன்றினால் என்ன ?

தேவ : பேச்சுக்கு என்ன குறை ? நீங்கள்இவர்களை அழைத்துக் கொண்டு வாருங்கள்.

**(உலாக சாரங்கமுனி, வேதவேத்தியன், தேவதத்தன் நடந்து செல்லல்)**

தேவ : நேற்று முனிவர் அவர்கள் தண்ணீர் எடுத்த இடத்தில் இவன் இப்போது உட்காந்து இருக்கின்றானே ! இவனை என்ன செய்வது.

வேத : இது ஒவ்வொரு நாளும் நடக்கக் கூடிய செயலே அன்றோ. முனிவர் தண்ணீரை அந்தப் பக்கம் எடுத்துக் கொண்டு போனவுடன் திருப்பாணன் உடனே வந்து அந்த இடத்தில் அமர்ந்து கொள்ளுதல் முதலியன ஒவ்வொரு நாளும் சாதாரணமாக நடக்கக் கூடிய

செயலே ஆகும்.

தேவ : அதுவே தரித்திரம். காவேரி நதியின் இறங்கும் வழியெல்லாம் அசுத்தப் படுத்தப்பட்டுவிட்டது. என்ன நியாயம் ?

வேத : என்ன இருக்கிறது ? அவனால் அசுத்தப்படுத்தப்பட்ட வழியில் இறங்கி யாரும் தண்ணீர் எடுக்க மாட்டார்கள் புதிய வழியை ஏற்படுத்திக் கொள்வது - தான் சரி.

தேவ : நாளைக்கு இந்த வழிகூட அசுத்தப் படுத்தப்படும். எவ்வளவு கர்லத்திற்கு இந்தத் துன்பநிலை ? இப்போழுது அது முடியாது.

உலோ : இதுவே வேலையா மறுபடியும் மறுபடியும்
இது சரியான நியாயமா ?
முந்நாள் போல நேற்றும் இன்றும்
இன்று போல நாளை கூட (இதுவே)
ஒன்றா இரண்டா நூறுவழிகள்
அசுத்தப்பட்டு அநாகரீகமானது (இதுவே)
அந்தப் பக்கம் போனேன் இந்தப்பக்கம் வந்தேன்
இந்தத் தீண்டாமைக்காக எந்தப் பக்கம் போவேன்
(இதுவே)

தேவ : முனிவரே ! இது எனக்கும் வருத்தமாக உள்ளது. யார் அந்த வழியில் இருப்பவன். அடேய் ! உன்னையே-அவன் பதில் பேசமாட்டான்; அவன் வழக்கமே இதுவாகும்.

உலோ : நான் எத்தனை வழிகளானாலும் மாற்றிக் கொள்வேன். எவ்வளவு தூரமானாலும் போய் வருவேன். உடல் கஷ்டம் பரவாயில்லை. மனத்தூய்மை கெட்டால் நான் பொறுக்கமாட்டேன்.

தேவ : தீண்டத்தகாதவன் இந்தக் காவேரி நதியைத் தீண்டத்தகாததாக மாற்றுகின்றானே ! இதைப் பொறுக்கமுடியுமா ?

உலோ : அதைப் பொறுக்க முடியாது. அவனைப் போவென்று சொல்.

தேவ : அடே. . . டேய் . . . டேய். (அவனுக்குக் கேட்கவில்லை)

உலோ : அவன் அசையமாட்டான்; அவன் பெயரைச் சொல்லிக் கூப்பிடு.

தேவ : நானா! அந்தப் பஞ்சமுனியின் பெயரையா ?

உலோ : என்னால் அழைக்க முடியுமா ?

தேவ : அடேய், டேய். . .திருபாணா. என் உடல் பற்றி எரிகின்றது, முனிவரே.

உலோ : தவிர்க்க கூடியது. எத்தனை வழிகளை மாற்றுவது ? எவ்வளவு தூரம் செல்வது ? எங்கே தண்ணீரை எடுத்துச் செல்வது ? என்ன சொன்னாலும் அவன் கேட்பதில்லை. சொல்லிச்சொல்லி நானும் அயர்ந்து விட்டேன். என்ன சோதனை ? இன்று அவன் பேசமாட்டான்; கேட்கக்கூட மாட்டேன் என்கின்றானே.

தேவ : இவன் எவ்வாறு பேசுவான் ! சுவாமி. கர்வம், கண்ணில் கொழுப்பு இருக்கின்றது.

வேத : எவ்வளவு பக்திப் பரவசம்

தேவ : சுடுகாட்டில் பெறும் பக்திப் பரவசம். அடே திருட்டு சந்நியாசி, அடே சண்டாளா, அடே பஞ்சம குலத்தைச் சேர்ந்தவனே. அடே விலங்கைவிட இழிவானவனே! ஓ துன்மார்க்கனே !! மதம் பொருந்தியவனே !!! எழுந்து சென்றுவிடு.

உலோ : அவன் கேட்கமாட்டான்; அசையவும் மாட்டான். கத்துவதால் தொண்டை வலியைத் தவிர வேறொன்றும் மிஞ்சாது

வேத : முனிவரே ! சந்தேகமில்லை. திருப்பாணன் சமாதி நிலையை அடைந்து விட்டான்.

தேவ : அவன் மூஞ்சி ! அவனுக்கு அந்த யோக்கியதை இன்னும் வரவில்லை.

உலோ : வேத வேத்தியா ! அது எவ்வளவு எளிமை இல்லை. சமாதி நிலையை அடைவதே விசேடம் ஆகும். பஞ்சமனுக்கு அந்த வாய்ப்பு இல்லை.

தேவ : திருப்பாணா ! கேட்கவில்லையா ? கேட்கவிரும்பவில்லையா ? அசைய மாட்டாயா ? அசைய மனமில்லையா ? கேட்டுக்கூட அசையமாட்டாயா ? கேட்காத தால் அசைய வில்லையா ? ஏண்டா தலையைக் கூட அசைக்க மாட்டேன் என்கிறாய்.

வேத : அது தவநிஷ்டை

உலோ : வேதவேத்தியா ! பஞ்சமன் தவம் செய்தல் கூடாது. அது இயலாத ஒன்று, வெட்டியாக கத்தாதே- பேசாதே !

தேவ : முனிவரே ! ஒவ்வொரு நாளும் புதிய அலை வந்து கரையை, கரையில் உள்ள நீரைத் தழுவிச் செல்வது போலவே, தண்ணீர் கூட. . .

உலோ : அது முடியாது. இந்தநாள் இந்தக் கரைகூட தண்ணீர் நிறைந்துள்ளது தான். அதனால். .

தேவ : திருப்பாணன் எழமாட்டான்.

உலோ : எழுந்தே ஆக வேண்டும்.

தேவ : அவன் கேட்கமாட்டேன் என்கிறான்

உலோ : கேட்கச் செய்யவேண்டியது; தவிர்க்கவியலாது.

தேவ : வார்ததையால் பயன் இல்லை என்றால் ரெண்டு அடி கொடுத்தால் கூடப் பரவாயில்லை.

உலோ : ஸ்ரீ ரங்கநாதன் சேவைக்கு உகந்த கைகள் இந்தக் கைகளால் நானா - அடிக்கமாட்டேன்.

தேவ : இன்னும் செய்ய வேண்டியது என்ன இருக்கின்றது ? அடிப்பதைவிட வேறுவழியே இல்லை.

உலோ : மாதவனுக்குச் சேவை செய்த கரங்கள்

தேவ : விக்கிரஹ ஆராதனையில் ஈடுபட்ட திடமான கரங்கள்

வேத : தேவதத்தா, முனிவரை வற்புறுத்தாதே.

உலோ : சிலை-சிலை விக்கிரஹம்- சிலைகள்- கற்கள்- பெற்றுக் கொள்.

தேவ : (கல்லெடுத்து முனிவரிடம் கொடுத்தல்)

உலோ : நான் கொடுத்ததே அபிஷேகத் தண்ணீர். அதை எடுத்துக் கொண்டு போவது நிச்சயம். அடே ! அசையமாட்டாயா ? உனக்கு இதுவே தகுந்த தண்டனை. (கல்லால் அடித்தல்)

வேத : எவ்வளவு கோரம்

தேவ : திருட்டு சந்நியாசி, கண்ணைத் திறக்கின்றான்.

வேத : அறிவில்லாமல் போனால் சரி. திருப்பாணன் கண்விழித்தானே யொழிய அறிவில்லை.

தேவ : அதெல்லாம் ஒண்ணுமில்லை; ஞான சமாதியோகம் கெட்டு விட்டது.

உலோ : இவனுக்கு எவ்வளவு கொழுப்பு அசையமாட்டேன் என்கிறான்.

வேத : ஐயோ ரத்தம் ! ஒடு கின்ற ரத்தம் !! தேவனே ! ஸ்ரீ ரங்கா ! காவேரி அரங்கா !! கருணைக்கடலே ! ஸ்ரீ ரங்க ரங்கா ! இறைவனே ! பார்த்தாயா பார்த்தாயா ?

தேவ : அது இரத்தம்தான்

வேத : சுவாமி போட்டது கல், பட்டது நெற்றிக்கு, ஒழுகியது ரத்தம், சேர்ந்தது காவேரி நதியில். . . காவேரித் தண்ணீரில்.

தேவ : தகுந்த தண்டனை கிடைத்து விட்டது.

வேத : ''காவேரியே ! ஸ்ரீ ரங்கநாதனின் தேவியே !! இந்த இரத்ததை உன் உதிரத்தில் மறைத்துக் கொள் இம் மனிதனின் இரத்தத்தை ஏற்றுக் கொள் தாயே ! நெற்றியில் பொட்டாகவும் வைத்துக்கொள் சிந்தூரப்

பொடியாகத் தெளித்துக் கொள்''

தேவ : வேத வேத்தியா ! ஏன் இவ்வாறு கத்துகின்றாய் ?

வேத : தேவனே ! திருவரங்கனே !

நீயும் வெறும் சிலைதான்

உன் கோயிலும் வெறும் கல்லுதான்

இந்த நகரமும் வெறும்கல்லுதான்

இஃது ஒரு கல் தேசம்

இங்குக் கருணை பறக்காது

மகிழ்ச்சி பொங்காது

அன்பு விளையாது.

பக்தியின் பேரால் சமூகத்தின் பேரினால் நீதியின் பேரினால் அநியாயம் தோன்று கின்றது. அக்கிரமம் வளர்கின்றது. அதர்மம் தலைவிரித்து ஆடுகின்றது. மோகம் கிளை கிளைகளாகப் பல்கி பெருகி வளர்கின்றது. எத்தனைப் பழங்கள்; காய்கள்; என்ன அழகு, என்ன இனிமை !

உலோ : வேதவேத்தியா ! நீ அதிகப் பிரசங்கம் செய்கின்றாய்

வேத : முனிவரே !

உலோ : ஒன்றும் பேசாதே

திரு : பார்த்தாயா காவேரி அரங்கனே ! முறையைக் கேட்டாயா அரங்கனே !

வேத : பார்த்தாயா காவேரி அரங்கனே ! முறையைக் கேட்டாயா அரங்கனே !

திரு : பார்த்தாயா காவேரி அரங்கனே !

வேத : பார்த்தாயா காவேரி அரங்கனே

முறையைக் கேட்டாயா திருவரங்கனே !

பூமி அசைந்தாலும் ஆகாயம் அசைந்தாலும்

எண் திக்குகள் அசைந்தாலும்

திருவரங்கன் இதயம் அசையாதோ

அவனும் விக்கிரகத்துடன் அசையானோ
(பார்த்தாயா)

பூதேவீ இடுப்பு வளைந்தது
காவேரி நதி பொங்கியது
திருவரங்க நாத தேவனின்
முகம் அன்பை விழுங்கியது (பாத்தயா)
இரத்தம் தாரையாக வழிந்தது
ஊரிற்குக் கண்கள் தோன்றின
தேவனின் நிறைந்த இதயம்
கோயில் கற்சிலையில் மறைந்தது (பார்த்தாயா)

திரே : பார்த்தாயா காவேரி அரங்கனே !
முறையைக் கேட்டாயா திருவரங்கனே !

வேத : (திருப்பாணன் அருகில் சென்றான்)

தேவ : வேண்டாம், போக வேண்டாம். பஞ்சமனைத் தீண்டுதலால் வரும் பாவத்திற்குப் பலியாக வேண்டாம்.

வேத : அடி அதிகமாகப் பட்டுவிட்டதா ?
எம்பேருமான் வரத்தைப் பார்த்தாயா !
உன்னுடைய பக்திக்கு இதுதான் பலனா திருப்பாணா ?

திரு : பார்த்தாயா காவேரி அரங்கனே !

வேத : திருப் பாணா

திரு : ஆ. . . யார் ?

வேத : பார்த்தாயா ?

திரு : என்ன நடந்தது

வேத : தலை உடைந்து விட்டது

திரு : நெற்றியைத் துடைத்தும் கொண்டு. (இந்தப்பிசிபிசுப்பு. . .)

வேத : இரத்தம். முனிவரின் கல்லால் பட்ட அடி. இரு

கட்டுகட்டு கின்றேன்.

திரு : வேண்டாம், என்னைத் தொடவேண்டாம்.

வேத : நில் (துணியால் கட்டுகட்டுகின்றான்)

திரு : உன்னைத் தொடுதலால் ஏற்படும் இன்பம் திருவரங்கனைத் தழுவும் இன்பமே இல்லையா ? வேதவேத்தியரே !

வேத : எவ்வளவு இரத்தம் ஒழுகியுள்ளது.

திரு : இந்த இன்பம் போதும். எவ்வளவு இரத்தம் வேண்டுமானாலும் ஒழுகி போகட்டும், காவேரி அரங்ககனே ! இது உன் இரத்தம், உன் விருப்பம் போல எது வேண்டுமானாலும் செய்து கொள். (திருப்பாணன் இரத்தம் பட்ட கல்லைக் கையில் எடுத்துக் கொள்ளல்)

உலோ : வேத வேத்தியா ! நீ பஞ்சமனைத் தொட்டுவிட்டாய் உனக்கு இங்கு இனி வேலையில்லை.

வேத : (கல்லுடன்) திருவரங்கநாதா, உனக்குக் கோயிலில் நுழையும் அனுமதியும் தடுக்கப் பட்டுவிட்டது.

திரு : பார்த்தாயா காவேரி அரங்கனே ! என்னைத் தீண்டியதற்கு உரிய தண்டனையைப் பார்த்தாயா ?

வேத : இந்தக் கல்லால்தான் உன்னை அடித்தது.

திரு : என் அரங்கனைப் பூஜிக்காத கரங்கள் உண்மையில் கல்லே. என் நெற்றியை அன்பாக முத்தமிட்டதும் கல்லே. உலோக சாரங்கமுனிவரின் தழுவலால் ஏற்பட்ட சுகத்தை எனக்கு, என் நெற்றிக்கு அளித்த கல். முனிவரை இந்த வைணவதாசனின் அருகே கொணர்ந்த கல். உயிரைக் குடிக்க மேலேறி என்மீது வந்த கல். தீண்டத்தகாதவனை, தீண்டத்தகுந்தவனைத் தீண்டினாலும் எவ்வித மாசும் பெறாத கல். என் அரங்கனே முனிவரின் கைகளில் பட்டு இவ்வடிவில் எனக்கு வந்து வாய்த்தான். என் திருவரங்கனே இந்தக்கல்; இந்தக் கல் என்னுடையதே ! இந்தக் கல்

எனக்காக வந்தது. முனிவரே எங்கே இன்னொரு கல்; அதுவே எனக்கு இன்பம். அதுவே எனக்கு அமைதி.

உலோ : நீ அங்கிருந்து போகாவிட்டால், மறுபடியும் கல்லடி நிச்சயம்.

திரு : அதுவே என் விருப்பம்; கல் மழையைப் பொழியச் செய் முனிவரே.

வேத : திருப்பாணா நீ எதற்காக இந்தக் கரையில் உட்காருகின்றாய், இது முனிவர்கள் வரும் கரை அல்லவா ?

திரு : எனக்குத் தெரியாது

தேவ : தெரியாதா ? தெரியாமலிருக்குமா ? அகங்காரம் வேறொன்றுமில்லை.

வேத : திருப்பாணா ! ஒவ்வொரு நாளும் இவ்வாறு முனிவர்கள் வரும் வழியில் அமர்வது எதற்கு ? ஒவ்வொரு நாளும் முனிவர் எப்பக்கம் செல்வது என வருந்தி உன்னைத் திட்டுவது எதற்கு ?

திரு : எனக்கு ஒன்றும் தெரியாது எம்பெருமானே ! திருவரங்கனே ! எனை ஈன்ற தந்தையே ! என் மீது உனக்கு எவ்வளவு ஆசை. உலோக சாரங்க முனியின் புனிதமான பாதமுத்திரை பட்ட இடத்தில் எனக்கு இருப்பிடம் அளித்தாயா ! வேத மூர்த்தியான உலோக சாரங்க முனிவனின் பாதத்தாமரை முத்திரை மீது எனக்குச் சிம்மாசனம் ஏற்படுத்தினாயா ! கோயில் சுற்றுப்புறம் அனைத்தும் திரிந்து எம்பெருமானின் பாதங்களைச் சேவித்து, அர்ச்சகர்கள் பாதம் பட்ட இடத்தை எனக்கு ஒதுக்கினாயா ! அதனாலன்றோ இறைவனே எனக்கு ஆன்மசக்தி, சைதன்னியம், தேஜசு முதலியவற்றைக் கருணை செய்தாய். திருவரங்கனே என்னுடையதே அதிர்ஷ்டம், என்னுடையதே ஆனந்தம். உன் கரங்கள், கால்கள் ஆசீர்வதிக்கப் பட்டவை. அவை என்னை எப்போதும் சுற்றிக் கொண்டே, என்னைக் காப்பாற்றுகின்றன.

என்னுள்ளே நீயே எம்பெருமானே ! என்னுள்ளம் முழுவதும் நீயே நிறைந்துள்ளாய். என் திருவரங்கனே !

தேவ : திருப்பாணா ! நீ போகவிட்டால் தலை உடைவது நிச்சயம்.

உலோ : (மறுபடியும் கல்லெடுத்தல்)

வேத : திருப்பாணனை (பக்கத்தில் இழுத்துக் கொள்ளல்)

தேவ : நீ மறுபடியும் பஞ்சமனைத் தீண்டினாயா ?

வேத : யார் பஞ்சமன் ? யாரைத் தொட்டால் தீட்டு ? நான் இப்போழுது திருவரங்க நாதனின் பக்தனைத்தான் தொட்டேன் ! இது எவ்வளவு ஆனந்தம்.

தேவ : இப்போழுது நீயும்பஞ்சமன், உனக்குக் கூட கல்லடி தப்பாது.

வேத : பஞ்சமனைத் தொட்டகல் எந்த மாறுதலும் பெறவில்லை. அவனைத் தொட்ட நான் பயன்பட மாட்டேனா, என்ன நிலைமை ? எம்பெருமானே இது என்ன நியாயம்.

திரு : கல் பட்டது இரத்தம் வழிந்தது
என்ன நடந்தது இதற்குள்ளே
எனக்கு என்ன நடந்தது இதற்குள்ளே
அரங்கனுக்கு என்ன நடந்தது இதற்குள்ளே !
மக்கள் உறக்கம் கொள்வதனால்
ரவி மதி உதயமாகவில்லையா
தேவதேவன் கண் கொண்டு பாராததால்
தர்ம நோக்கு மாறுமா ? (கல்)
அரங்கநாதனின் ஒளி முகத்தில்
ரம்யமான ஒளி நிற்குமா ? (கல்)
நதியில் திரியும் நீரலைகள்
அசைந்து ஆடுதல் நிற்குமா ?

வேத : மூர்த்தி மறையும் நிலையே என

முன்னால் அடி வைத்தான் திருப்பாணன்
முகத்துக்கு வேண்டியது சாந்தம் என
மௌனமாய் முன்னால நடந்தான் திருப்பாணன் (மூர்த்தி)
இரத்தம் தண்ணீர் இரண்டும் பொழிந்ததுபோல்
முகத்தில் ஒளியை நிறைத்துக் கொண்டான்
பொங்கி எழுந்த பக்திப் பரவசத்தால்
கொஞ்ச கொஞ்சமாக மனத்தை அசைத்தான்
(மூர்த்தி)

இடம் மாறினாலும் பூமி மாறாது
மனமும் மாறாது மக்களும் மாறமட்டார்கள்
தன்னை மறைத்தாலும் ஆன்மா மாறாது
நதி நின்றாலும் தண்ணீர் பாய்தல் நிற்காது
(மூர்த்தி)

அரங்கநாதா - திருவரங்கநாதா - உன் பக்தர்களில் இவ்வளவு கடினமான தீட்சை ஏற்றவர் யார் ? நூற்றுக்கு கோடிக்கு ஒருவரான இந்த மகாபக்தன்

**(திரை)**

## மூன்றாம அங்கம்

**முதல் களம் : காவேரி நதிக்கரை**

**திரையில்**

திரு : திருவரங்கனே - ரங்கா அரங்கா - என் அண்ணனே
காவேரி அரங்க அரங்கனே
கஸ்தூரி அரங்க அரங்கா - என் அண்ணனே
காவேரி அரங்க அரங்கா
இடைச்சேரி வீதியில் எவ்வளவு வெண்ணெய் விழுங்கினாய்
யமுனை நதிக்கைரையில் எவ்வளவு வெண்ணெய் மறைத்தாய் (திருவரங்கனே)

இவ்வேரிக் கரை மாற உன் பிராணனை ஊதினாய்

திருவரங்க நகர் முழுவதும் சுவாமியே உன் சக்தியை நிரப்பினாய் (திருவரங்கனே) ·

(வேத வேதத்தன் உள்ளே நுழைதல்)

வேத : மகாபக்தனின் பாடல் இனிமை உலகத்திற்கு ஆன்மாவின் இனிமையாகும். உலோக சாரங்கமுனிக்கு வாழ்க்கை இனிமையாகும்.

தேவ : என்ன உமது எண்ணம்.

வேத : நீ கூட கவனித்தாய் இல்லையா ? தேடுபவன், தேடப்படுபவன் இருவரையும் .

தேவ : யார்

வேத : திருப்பாணன்

தேவ : எவ்வாறு

வேத : திருவரங்கனைத் திருப்பாணன் தேடுகின்றான். உலோக சாரங்கமுனி திருப்பாணனைத் தேடுகின்றார்.

தேவ : அதெப்படி முடியும்

வேத : இதில் முடியாதது என்ன இருக்கின்றது. இவ்வளவு நாள் திருப்பாணன் முனிவரின் மெய்தொடுதலால் ஏற்படும் சுதத்தைப் பெற்றான். இப்போழுது முனிவரே திருப்பாணனின் மெய் சுகத்தை விரும்புகின்றார்

தேவ : நான் நம்ப மாட்டேன். என்ன சாட்சி; காட்டு பார்க்கலாம்.

வேத : எதிராகத் தெரிகின்றதே, அதோ அங்கே போவது யார் ? உலோக சாரங்கமுனியே இல்லையா ? எதற்காகப் போகின்றார்.

தேவ : தண்ணீர் கொண்டு வருவதற்காக ?

வேத : சரி அவருக்கு முன்னால் இருப்பது யார் ?

தேவ : திருப்பாணன்

வேத : என்ன நடக்கின்றதோ பார்த்துச் சொல்

தேவ : திருப்பாணன் எழுகின்றான்

வேத : நன்றாகப் பாத்தாய் எதற்காக எழுந்தான்

தேவ : கல்லடி பயத்தினால்

வேத : தவறாக நினைத்துவிட்டாய். முனிவர் தண்ணீர் எடுத்துச் செல்வதற்காக இன்றைக்குக் குறியிட்ட இடம்.

தேவ : அதென்ன ?

வேத : நேற்றுமுதல் அங்கு தவநிஷ்டையில் இருக்கும் திருப்பாணனால் அந்த இடம் தூய்மை யாக்கப்பட்டது. அந்த புண்ணிய, இடமே எம்பெருமான் அபிஷேகத்திற்கு உரிய நீர் எடுத்துச் செல்லும் இடமாகும்.

தேவ : நான் இதை நம்பமாட்டேன்.

வேத : நம்முடைய நம்பிக்கைக்குப் பேச்சு என்ன வேண்டி கிடக்கு, முனிவனின் செயலைப் பார்.

தேவ : அதையே பார்

வேத : இனி திருப்பாணன் கோயிலுக்கு- முனிவர் நதிக்கு- இவ்வளவு தான் கவனிப்பு. திருப்பாணன் எழுந்து வந்த இடமே முனிவரின் நீர் எடுக்கும் இடமாகும். திருப்பாணன் மெய்த் தீண்டலால் மகிழ்ந்து பரவசமான நதித் தண்ணீர் உலோக சாரங் முனியின் வாரீசாகும். இதுவே கதி; இதுவே ஸ்துதி. இது தர்மத்தின் உருவம் இவ்வளவு நாள் முனிவரின் நம்பிக்கைக் காற்று திருப்பாணனின் மூச்சுகாற்று. பிறகு திருப்பாணன் விட்ட மூச்சு காற்று முனிவரின் மூச்சுக் காற்று இதுவே அரங்கநாதனின் ஆன்மா.

தேவ : எனக்கு ஒன்றுமே புரியவில்லை

வேத : இவ்வளவுதான ! ஒன்றும் புரியவில்லையா ? இது சிலையைப் போன்று அமைதியானது. நேற்று

திருப்பாண் அமர்ந்த இடமே இன்று முனிவர் அபிஷேகத்திற்கு நீர் எடுக்கும் இடமாகும். முந்தாநாளும் அவ்வாறே இருந்தது. எல்லாக் காலமும் அவ்வாறே இருக்கும். திருப்பாணன் தவம் செய்த இடம் முனிவர் தீர்த்தமாடும் இடமாகும்; தீர்த்தம் எடுக்கும் இடமாகும்.

தெவ : ஆமாம் முனிவர்கூட அவ்வாறே, அங்கேயே, அதே இடம்.

வேத : தவம் செய்யும் இடம்; தீர்த்தமாடும் இடமாகும்.

தேவ : சத்தமாக முனிவரே ! முனிவரே !! அந்த இடத்தில் தண்ணீர் எடுக்க வேண்டாம்.

வேத : இன்னும் அதிகமாகச் சத்தம் போட்டாலும் அவருக்குக் கேட்காது

தேவ : வேண்டாம் அந்த இடம், தீண்டத் தகாத இடம். ஐயா, முனிவரே உங்களுக்குக் கேட்கவில்லையா ?

வேத : அங்கே திருப்பாணன் பக்தி முழுவதும் முனிவருக்குச் சொந்தமாகும். இன்னும் முனிவர் பக்தர்களின் நேசர். அவருக்குப் பக்தியிலிருந்து விடுதலை இல்லை. உன் குரல் அவருக்குக் கேட்காது.

தேவ : இது எப்போதிலிருந்து நடக்கின்றது.

வேத : அந்தநாள் அபிடேக நீர் வேண்டுமென முனிவர் திருப்பாணனை அனுப்பி வைத்தாரே, அன்றைய நாளிலிருந்து.

தேவ : அதாவது கல்லால் அடித்து,

வேத : அப்பொழுதிலிருந்து தேவத்தா தேடுபவன், தேடிக் கொண்டே இருக்கின்றான்.

தேவ : வேதவேத்தியா நீ ஒரு மகான்

வேத : அது சரி இல்லை; நான் சாதாரண மனிதன். மனிதர்களுள் மாதவனைப் பார்ப்பவன் நான். மாதவனை மனிதனாக மதிப்பவன், மறுப்பவன் நான் இல்லை.

தேவ` வேத வேத்தியா ! நீ புண்ணியம் செய்தவன் ! திரிகால ஞானி மகாத்மா ! நமோ நமஃ

வேத : தேவதத்தா ! மனிதர்கள் அனைவரும் ஒன்றே. வேறுபாடுகள் அனைத்தும் கற்பனையானவை, உண்மையற்றவை. ஆன்மாயளவில் அனைவரும் ஒரே மாதிரிதான். அவ்வாறே நானும் நீயும் ஒன்றுதான். வேதங்கள் இறைவனுக்குத் தொடர்பானவை. இறைவன் வேதவேத்தியனே ! வேதவேத்தியன் தேவதத்தன் இருவர் ஆன்மாவிலும் நிரந்தரமானவன். கருத்துக்களில் வேறுபாடுகள் இருக்கலாம் ஆன்மா நிரந்தரமானது; வேறுபாடு அற்றது.

தேவ : எனக்கு ஞானக் கண் அளித்தாய் அல்லவா ?

வேத : அது இறைவனின் விருப்பம். அனுக்கிரஹத்தின் விருந்தினன் திருப்பாணன். அனுக்கிரஹத்தின் மிகத் தொலைவில் இருப்பவன் திருப்பாணன். எம்பெறுமானின் அனுக்கிரஹம் கிடைத்து விட்டால் நதித் தண்ணீர் அபிடேக நீராகவும் தோட்டத்துப் பூக்கள் படைக்குரிய பூக்களாக மாறும். அக் கருணை இல்லாமல் போனால் ஆகாய நட்சத்திரங்கள் பூமியில் விழுந்தாலும் பலனில்லை; அமிர்த்த துளியே விஷமாகும்.

தேவ : திருப்பாணன் செயல்- உண்மையே. அவ்வளவும் தியான நிஷ்டை அவன் புண்ணியம் செய்தவன்.

வேத : புண்ணிய பிறவி எடுத்தவன். புண்ணிய ஆன்மா பொருந்தியவன்

தேவ : எவ்வளவு உற்சாகமாக முனிவர் அபிடேக நீர் கொண்டு வருகின்றார் பார்.

**(உலோக சாரங்க முனி உள்ளே நுழைதல்)**

உலோ : உன் இதயம் வெண்ணெய் ஒப்பது

உன் இனிய மனம், உன் சொற்கள் புனிதமானது

உன் உயர்வான சுபாவம்

என்னைத் தெரியச் செய்து உன்னையும் தெரிய வைத்தது.

உன்னைக் காண வெண்ணிலவு ஒளிர்கின்றது

உன் சரீரம் பூவைப் போன்று மென்மையானது

உன் விந்தை ஒளி

என்னைத் தெரியச் செய்து உன்னையும் தெரிய வைத்தது.

நீ இல்லாத நாள் இவ்வுலகம் வெறுமையாகும்

நீ இருக்கும் நாளே வாழ்க்கையின் உயிர்நாடி

நீ உடனிருக்க இவ்வுலகம் உண்மையானது.

நீ இல்லாமல் போனால் நானும் இல்லை

இருக்கும் கொஞ்ச நாளில் உன் பேரைப் பாடுவேன்

பறை சாற்றி சொல்லியே பாடுவேன்

உன்னைக் கோயிலில் நிறுத்தி ஆகாயத்தைப் புவியில் இறக்கி

சொர்க்க சுகத்தைப் பூமிக்குக் கொணர்வேன்.

தேவதத்தா ! வேதவேத்தியனுடன் இன்னும் நட்பைத் தொடர்- கின்றாயா ? என்ன உன் முகம் அவ்வாறு ஒளிர்கின்றது.

தேவ : நீங்கள் ஆனந்தமாய் இருக்கின்றீர்கள் அல்லவா ? அதனால், அந்த நட்பால் இந்த ஒளி ஏற்படுகின்றது.

வேத : உன் உற்சாகம் ?

உலோ : பஞ்சம முனியைத் தொட்டதிலிருந்து நீ என்னுடன் பேசும் யோக்கியதை இழந்து விட்டாய்.

வேத : வினாடி நேரம் இல்லை. ஆனால் கொஞ்ச நேரமே நீங்கள் மட்டும் இனி சில மாதங்களே !

உலோ : அது என்ன ?

வேத : பஞ்ச முனியை வணங்குவதற்கு

உலோ : என்ன சொன்னாய் !

வேத : இன்று நீங்கள் எடுத்த அபிடேக தண்ணீர் இப்பொழுது வரையில் திருப்பாணன் பத்மாசனம் போட்டு அமர்ந்த இடமாகும்.

உலோ : உண்மையாகவா ?

தேவ : உண்மையே முனிவனே

வேத : இந்நாள் வரை நடந்தது இதுவேயாகும்.

உலோ : அநியாயம்

வேத : இல்லை. இல்லை யென்பதை நீங்கள் பழக்கிக் கொண்டு விட்டீர்கள்

தேவ : ஆமாம் முனிவரே !

உலோ : அபசாரம் ! அபசாரம் ! அபசாரம் நடந்து விட்டது. தேவனே, ஸ்ரீரங்கனே ! உன்னை மாசு நிறைந்த நீரால் அபிஷேகம்செய்தேனா! என் தந்தையே ! எனக்கு எதுவும் தெரியாது தலைவனே !

வேத : நீங்கள் எதுவும் அறியாதவர்தான் உண்மையே ! (அந்த வேலை செய்யும் போது)

உலோ : என்னை ஏன் தடுக்காமல் போனீர்கள்

வேத : நீங்கள் அந்த இடத்தில் கால் வைத்த நொடியிலிருந்து பரவசமான ஜீவி.

தேவ : அழைத்தாலும் உங்களுக்குக் கேட்கவில்லை.

வேத : பக்கத்தில் பிடித்து இழுத்தாலும் நீங்கள் வரவில்லை

உலோ : இது எவ்வளவு கெட்ட கலிகாலம்.

வேத : இதுவே காலத்தின் கோலம்

உலோ : நான் எப்படிச் செய்யவியலாத செயலைச் செய்தேன். இப்பொழுது நான் என்ன செய்வேன். என்ன செய்வதென்று புரியவில்லையே. இது எப்படி நடந்தது. எந்தச் சக்தி என்னை இவ்வாறு செய்ய வைத்தது. சொல்வதற்கு இயலாத ஒளி என்னைக் கவர்ந்ததோ. இந்த மாறுபாடான வழியில் செல்ல

என்னால் எவ்வாறு இயன்றது. எந்த அதிர்ஷ்டம் என்னை இவ்வாறு அழைத்துச் சென்றதோ ? யார் இதற்குப் பொறுப்பு ?

தேவ : வேறு யாரும் இல்லை . . நீங்களே !

வேத : என்ன ஆனாலும் சரி நீங்கள் பஞ்சமுனியைத் தொட்டு விட்டீர்கள். நீங்கள் திருவரங்கனின் கோயிலில் நுழையக் கூடாது.

தேவ : இது அநியாயம் வேதவேத்தியனே !

வேத : எது நியாயம்

உலோ : ஆனாலும் நீ யார் என்னைக் கேட்க.

வேத : உங்களால் வெளியேற்றப் பட்டவன்

உலோ : உன் புத்தி சாதூர்யமான செயல் . சரி பயன் ஒன்றே. நீங்கள் முழு நினைவுடன் செய்த செயல்.

வேத : பஞ்சமனைத் தொடுதல் தோஷம் இல்லையா ? அதற்குப் பலனாக வெளியேற்றுதல் தவிர வேறு வழியே இல்லை.

உலோ : வேதவேத்தியனே ! என்னைத் தண்டிக்க வேண்டாம் என் தந்தையை, என் இறைவனை, என் திருவரங்கனைப் பார்க்காமல் இருக்க முடியாது. தொட்டு, சேவித்து, மகிழ்தல் முதலிய செயல்களை என்னால் தவிர்க்க முடியாது. என் தந்தையிடம் இருந்து என்னைத் தனியாகப் பிரிக்க வேண்டாம்

வேத : முனிவரே ஆன்மாவின் வேதனைத் தங்களுக்குப் புரிகின்றது இல்லையா ? இறைவன் சந்நிதி உனக்குத் தூரமானது எனும் எண்ணமே இவ்வளவு வருத்தத்தைத் தருகின்றுது . திருவரங்கனைத் தரிசிக்க எத்தனையோ ஆயிரம் மைல்களுக்குத் தூரமான சாதி, சில பத்து மைல்களுக்குத் தூரமான ஒரு ஆன்மா படும் கஷ்டம் உங்களுக்குத் தெரியவில்லையா ?

**(திரையில்)**

திரு : இது மாதவன் ஆட்சி செய்த பூமி

மனிதன் தொடாத பூமி
எம்பெருமான் ஆட்சி செய்த பூமி
எனக்காக மிகுந்த பெரிய பூமி
பாவத்திற்கு கோபத்திற்கு
சாபத்திற்கு மோகத்திற்கு உரிய பூமி (இது)
பிராணிகளுக்கு மனிதர்களுக்கு
பவித்திரத்தை வளர்க்கும் பூமி
எனக்காக என் இறைவன்
ஏற்படுத்திய புண்ணிய பூமி (இது)
தன் உரிமையை வெளிப்படுத்தும் பூமி
வணங்கும் தகுதியைப் பெறும் பூமி
மக்களைத் தன்னுடன் சேர்க்கும் பூமி
உலகம் முழுவதும் பரந்த பூமி (இது)

உலோ : தேவனே ! என் இறைவனே ! திருப்பாணா . . . !

தேவ : முனிவரே நீங்கள் அந்தப் பேரைக் கூறினீர்களா ?

உலோ : தேவனே ! திருப்பாணனுக்குக் கொடுத்த பூமி நீ எனக்கு ஏன் அளிக்கவில்லை.

வேத : கடின தீட்சை பெற்றவர்களுக்கு, தீயவை அணுகாத முக்தர்களுக்கு, அமைதியான மனம் பெற்றவர்களுக்கு, துன்பத்தை பொறுத்துக் கொண்டவர்களுக்கு மட்டுமே புண்ணிய பூமி கிடைக்கும் அல்லவா ?

உலோ : எம் பெருமானே ! எனக்கு எதற்காக இந்தப் பரீட்சை

**(வேகமாக வெளியேறுதல்)**

**(திரை)**

## மூன்றாம் அங்கம் : இரண்டாம் களம்

**இடம் : திருவரங்கம் கோவில்**

உலோ : இறைவனே ! ஸ்ரீ ரங்கனே ! எனக்கு எதற்காகஇந்தப் பரீட்சை. என் தவறு என்ன ? எதற்காக இந்த வருத்தம்

எதற்காக இந்தத் துக்கம் ? இது என்ன பார்வை. எதுவும் தாங்கள் அறியாதவரா ? என் தந்தையே. என் மீது கோபமா ? எதற்காக இந்தமௌனம். உன்னை. மாசுபடச் செய்ய வேண்டும் எனும் எண்ணம் எனக்கு இல்லை. பூசையை நிறுத்தும் உத்தேசமும் இல்லை. தீட்டுப்பட்ட தண்ணீரைக் கொண்டு வந்தேன் எனும் எண்ணமும் இல்லை. என்னால் என்ன செய்யவியலும் ? எதற்காக இந்தக் கோலம் எதர்காக என் மீது குறிகொண்டு பார்க்கின்றீர்கள் ஒவ்வொரு நாளும் செய்யும் தூபத்தில், தீபத்தி ல் அளிக்கும் நைவேத்தியத்தில் உனக்குக் குறை வைக்கவில்லையே. காலையில் நீ திருப்பள்ளி எழுந்ததிலிருந்து நித்திய சயனம் (படுக்கைக்குச் செல்லும்) வரையில் உன் பாதமடியில் நிற்கின்றேனே. என் மீது ஏன் இந்த பாராமுகம். நான் உனக்கு உற்சவம் நடத்தவில்லையா ஊர்வலம் எடுக் கவில்லையா ? எதற்காக மௌனம் வகிக்கின்றாய் எனது தந்தையே ! உன் பார்வையில் அன்பு, புன்னகையில் கருணை, அழைப்பில் வாத்சல்யம் எங்கேதந்தையே ? இந்நாள் வரையில் சாந்தமாகச் செய்யும் வழிபாட்டில் என்ன குறை ? ஒரு சிரிப்பும் இல்லை; ஒரு வாவேன்ற அழைப்பும் இல்லை, ஒரு கண்ணசைவும் இல்லை. வா வென்றோ போ வென்றோ கூறவில்லை. உன் மௌனத்திற்கு என்ன பொருள் ? எங்கே அந்த அன்பு எங்கே அந்த வாத்சல்யம் ? எங்கே அந்த மகிழ்ச்சி, தயவு தாட்சண்யம், அபிமானம் மற்றும் அவகாசம். என் தந்தையே ! என்னைத் தெரிந்து கொண்ட நிலை என்ன ? என்ன ஆனது என் புனிதமான வாழ்க்கை. என் இதயம் என்னும் 'கரி' தான் என்னும் அகந்தையின் அடுப்பில் மெல்ல மெல்ல நெருப்பாக மாறுகின்றது.

தேவ : முனிவரே திருவரங்கனில் எவ்வித மாற்றமும் இல்லை. தங்களிடமே மாற்றம் காணப்படுகின்றது.

தங்களுக்கு என்ன ஆனது சுவாமியே !

உலோ : தேவனே ! எதற்காக இந்த அமைதி; எதற்காக இந்த வெறுப்பு, யார் என்ன செய்தார் ஐயா உன்னை ? இது வென தெரிந்து செய்தேனா? இவ்வாறு நடக்கின்றது என அறிந்தேனா ? ஒவ்வோரு நாளும் உன் முகம் எவ்வாறு ஒளியுடன் திகழும் தெரியுமா ? ஒவ்வொரு நாளும் உன் பார்வை அன்றலர்ந்த மலரை ஒக்கும். என்னை அழ வைத்தல் உனக்கு விருப்பமா ? என்னை வருத்துதல் உன் இலட்சியமா ? என் துக்கமே உனக்குப் பூசையா ? உனக்கு விருப்பமெனில் உன் பக்தனை அவ்வாறே செய்துவிடு. நான் உன் பக்தன், சேவகன், பூசாரி உன் விருப்பம் என்னை எதுவேண்டு மானாலும் செய்து கொள். இவ்வளவு காலம் உன்னைப் பூசித்து வந்தேன். அதற்குப் பிரதிபலன் கோபமா ? தெரியாமல் செய்த தவற்றிற்கு என்னை மன்னிக்க மாட்டாயா ? என்னைத் தவறிலிருந்து விடுவிக்க மாட்டாயா ? ஆசிர்வதிக்க மாட்டாயா ? கருணை காட்ட மாட்டாயா ? தேவ தேவனே !

தேவ : முனிவரே ! இறைவன் தங்களை என்ன செய்துவிட்டார் என இவ்வளவு வருத்தப் படுகின்றீர். எம்பெருமானார் சாதாரணமாக அழகுடனே விளங்குகின்றார். நீங்கள் வருத்தப்படும் மனிதனாக விளங்குகின்றீர். உங்கள் அமைதியே என் பிரார்த்தனையாகும்.

உலோ : தேவதத்தா ! இனி எனக்கு எங்கே மன அமைதி.

திரு : (திரையில்)

அனைத்தும் அற்ற தியாகியே

அனைத்தும் பெற்ற போகியே

தேவனே ! என்னைக் காப்பாயோ

இந்தப் பக்கம் வாராயோ

உன்னை இதயக்கோயிலில் நிறுத்தினேன்

கண் கோவிலில் மறைத்து வைத்தேன்
உள்ளும் வெளியும் உன்னானை ஏற்று
பூசை செய்தேன், உன்னை நாளும் பார்த்தேன்
(அனைத்தும்)

என்னைக் கண்ணில் நிறுத்திவிடு
விண்ணை மண்ணை சேர்த்துவிடு
உன்னை என்னுள்ளே நிறுத்திவிடு
என்னைக் கண்ணாரக் காண விடு (அனைத்தும்)

உலோ : ஸ்ரீ ரங்க ரங்கா ! காவேரி ரங்கா ! கஸ்தூரி ரங்கா கருணைக் கடலே ! ரங்கா ! சிரிக்கின்றாயா என்னைக் கருணையுடன் பார்க்கின்றாயா தேவனே ! எனக்கு எவ்வளவு அதிர்ஷ்டம் ! எவ்வளவு ஆனந்தம். என் தந்தையே உன் முகத்தில் என்ன மாற்றம் ? எதற்காக என்மீது கோபம் எதற்காகச் சிரிக்கின்றீர் இதற்குள் எதற்காகக் கோபித்துக் கொண்டீர்கள். என்னைப் பார்த்துச் சிரிக்க வில்லையா ? கோபிக்க வில்லையா ? நான் என்ன பைத்தியக்காரனா ? உன் சிரிப்பு எனக்குப் புரியாதா ? உன் கோபம் எனக்குத் தெரியாதா ?

பாடும் வரையில் சிரிப்பு, பாட்டு முடிந்ததும் கோபம் ? உன் சிரிப்பு திருப்பாணனுக்குச் சொந்தமானது. இதுவா உன் லீலை திருவரங்கா ! அவன் பாட்டிற்குச் சிரிப்பு, என் வார்த்தைக்குக் கோபம். நானே உன் கோபம். உன்னைப் பார்க்காத, பார்க்கமுடியாத வனுக்கு உன் சிரிப்பு சந்திரனை ஒக்கும். உன்னைப் பூசை செய்து சேவை செய்து கடினப் படும் எனக்கு நீ அக்கினியாத் தோன்றுகின்றாய். நன்றாக இருக்கின்றது இறைவனே ! என்னே உன் அழகு. என் வார்த்தை, என் பக்தி, என் பூசை, என் வாழ்க்கை அனைத்தும் பயனற்றவையானது. திருப்பாணன் பாட்டு உனக்கு ஏற்புடையது, அதுவே சொர்க்கம். உன் புன்னைகைக்கு ஏற்ற உணவு. பஞ்சம முனியின்

வார்த்தை உனக்கு இனிமை. என் பிரார்த்தனை உனக்குக் கசப்பானது.

என்ன அதிசயம் தந்தையே ! இந்த அற்பனின் மீதா உன் விளையாட்டு. என் முறையீடு உனக்குக் கேட்கவில்லையா ! என் பிரார்த்தனை உனக்குக் கேட்கின்றதா ! நான் போடும் எண்ணக் குமுறல் உனக்குக் கேட்கின்றதா இறைவா !

தேவ : உன்னைப் போன்ற மகாபக்தர்களின் பிரார்த்தனை ஸ்ரீ ரங்கநாதனுக்கு நிச்சயமாகக் கேட்கும் முனிவரே

**(திரை)**

**நான்காவது அங்கம் - முதல் களம்**

**இடம் : திருவரங்கம் கோயில் வாயிற்படி.**

**(திரையில்)**

திரு : திருவரங்க நாதனே ! திருவரங்கனே !
என் தந்தையே, எனை ஈன்ற தந்தையே !
எனக்காக நீ உனக்காக நான் இருப்பதால்
இருளையும் பசியையும் மறந்தோம்
என்னாலே நீயும் உன்னாலே நானும் வாழ்வதால் (திரு)
சொர்க்கமும் புவியும் சேர்ந்தது (திரு)
என் பின்னால் நீயும் உன்பின்னால் நானும் நிற்பதால்
தர்மம் மர்மம் பிரித்து விட்டோம் (திரு)
என்னுள்ளே நீ உன்னுள்ளே நான் உறைவதால்
இகலோகத்தில் பரலோகத்தில் இனிமேல் ஒன்றே (திரு)

**(தேவதத்தன் வேதவேத்தியன் உள்ளே நுழைதல்)**

தேவ : கோபுரத்தின் சுற்றுச் சுவர் மேல் வெண்ணிலவை ஒரே இடத்தில் வைத்தது போன்று எவ்வளவு அழகாக உள்ளது.

தேவ : காவேரி நதியின் உள்ளே, கருப்புப் பாறை- வெண்ணிலவு நீரின் மேல் பட்டு இப்படியும் அப்படியும் அசையும் அழகைப் பார்.

வேத : அந்தக் கல்லிற்கும் உயிர்கொடுத்தது திருப்பாணனின் கடின தீட்சையாகும். சிலை போன்று அமர்ந்து தியானம் செய்யும் திருப்பாணன் சொர்க்கத்தில் பூத்திருக்கும் பூவுக்கு ஒப்பானவன்.

தேவ : ஆகாயத்தில் வெண்ணிலவு - பூமியில் நீரோட்டம் - இடையே பாடல்.

வேத : அலைகளில் உருவாகும் குளிர்ந்த சிறுகாற்றுக்கு, பல்வேறு ஓசைகள் நிறைந்த அந்தப் பாடலே சொற்களைக் கற்றுக் கொடுத்தது. அந்த ஓசைக் கடல் திருவரங்கனின் செவிகளில் கூறியது என்னவோ ?

தேவ : குளிர்ந்து வீசுகின்ற காற்று

வேத : இல்லை, திருப்பாணன் அனுப்பும் செய்தி.

**(கோயில் மணி ஒலித்தல்)**

தேவ : திடீரென்று கோயிலில் ஏன் இந்த மணிச் சத்தம்.

வேத : திருப்பாணன் தூதிற்குத் திருவரங்கன் அனுப்பும் பதில் செய்தி. அது பாட்டு இது சத்தம். அதுவே இருவருக்கும் இடையே நடக்கும் உரையாடல்

தேவ : அதென்ன ? இதென்ன ? அந்த வெளிச்சத்தின் சாயல்

வேத : உலோக சாரங்கமுனியின் தெருவிற்கு, வீட்டிற்கு, உறங்கும் அறைக்கு இந்த வெளிச்சம் போகின்றது தேவதத்தா ! சந்தேகமில்லை இந்த வெளிச்சத்தின் ஓட்டமே திருவரங்கனின் பதில் உரையாகும்.

**(திரை)**

**நான்காம் அங்கம் - இரண்டாம் களம்**

இடம் : உலோக சாரங்கமுனி படுத்துறங்கும் அறை

உலோ : (தியானத்தில்)

எத்தனை காலத்திற்கு எத்தனை காலத்திற்கு

எத்தனை கால்த்திற்கு

கண்களைப் பெற்ற நன்மை இப்போது இடைத்து விட்டதடா

உன்னைப் பார்த்த உடனே நானும் சிறியவனாகி விட்டேனடா

ஆகாயத்தைப் பார்த்து நிலத்தைப் பார்த்து மௌனமாகி விட்டேனடா

பால் வடியும் கன்னம் சிவந்து போய் விட்டதடா

அழகான நெற்றியில் திகில் வந்து சேர்ந்து விட்டதடா

கருணை வந்து ஒளிரும் கண்களில் கண்ணீர் எதற்கடா (உன்னை)

நான் இருக்கும்போது உனக்கு துக்கமெதுக்கய்யா

நிலம் நீர் காற்று ஆகாயம் நெருப்பு இருக்க

இலட்சுமி தேவி பூதேவி அருகில் இருக்க

வர்ண தர்மம் ஆசிரமதர்மம் இருக்க

நான் இருக்கும்போது உனக்கு துக்கமெதுக் கய்யா (உன்னை)

**(திருவரங்கக் கடவுள் உள்ளே நுழைதல்)**

அர : முனிவரே ! முனிவரே !!

உலோ : யார் ? யாரது ?

அர : நான்தான் உலோகசாரங்க முனிவரே

உலோ : சுவாமி நீங்களா ?

அர : கண்டு கொண்டு விட்டாயே

உலோ : சுவாமி, இறைவனே ! என் அரங்க நாதனே !

எவ்வளவு பெரிய வார்த்தை கூறினீர்கள்

எவ்வளவு பெரிய வார்த்தை என்தந்தையே !

எவ்வளவு பெரிய வார்த்தை இரமேசா !!

கண்ணார உன்னைக் கண்டு கொண்டேன் தந்தையே !

உன்னைப் பார்த்த பின் தந்தையே !

விண்ணைப் பார்தேன் தந்தையே !!

உன்னைப் பார்த்தேன் பின் தந்தையே !

சுவர்க்கத்தை அறிந்தேன் தந்தையே !!
என் பிறவி புண்ணியம் செய்தது
என் வாழ்க்கை முழுமையானது
என் வாழ்க்கை பவித்திரமானது
என் உடல் உய்யானவனப் பூ
என் பிராணன் ஆனந்தமானது
என் இரத்தம் கங்கை நதி
என் பிராணன் தேஜஸ் உடையது
என் இதயம் பாரிஜாத பூவை ஒப்பது

அர : முனிவரே ! உங்கள் பூசை ஆசாரத்திற்கு

உலோ : குறைவில்லை எம்பெருமானே ! உன் தரிசனமே எனது பாக்கியம்

அர : என் தரிசன பாக்கியம் பக்தர்களுக்குத் தேவை அல்லவா ?

உலோ : தேவைதான் இறைவனே ! நான் புண்ணியம் செய்தவன்

அர : திருப்பாணன் என் பக்தன்

உலோ : உண்மையே, ஆனால் பஞ்சம இனத்தைச் சேர்ந்தவன். அவன் பெயரை நீங்கள் உச்சரித்தீர்களா ? இறைவனே !

அர : உன்னைப் போன்றே, என்னை அடைய பாக்களால் அர்ச்சனை செய்பவன்.

உலோ : அது பாடலர்ச்சனை இல்லை இறைவனே ! அது பாடலைக் கெடுக்கும் அர்ச்சனை இறைவனே ! - மேலும் தீண்டத் தகாதவன்.

அர : என் பாடகன் மட்டுமல்ல அவன் என் கவிஞனும் கூட.

உலோ : தெரிந்ததுதான் - ஆனாலும் தீண்டத் தகாதவன்.

அர : இவ்வளவு காலம், இவ்வளவு உயர்ந்த பக்தி கோயிலின் வெளியே இல்லையே.

உலோ : தவிர்க்க முடியாது சுவாமி

அர : அவன் கோயிலில் நுழைய மிகவும் விரும்புகின்றான்

உலோ : சகஜம்தான் . . .ஆனால் கிடைக்காதப் பழம்.

அர : என் தரிசனம் பக்தர்களுக்கு ஏற்பட் வேண்டியதே இல்லையா ?

உலோ : பக்தர்களுக்குக் கிடைக்க வேண்டியதுதான், ஆனால் பஞ்சம இனத்தைச் சேர்ந்தவனுக்கு இல்லை. சுவாமி ஸ்ரீ ரங்கநாதனே நீங்கள் பஞ்சம இனத்தைச் சேர்ந்த பக்தனுக்குக் காட்சியளிக்க வேணடாம்.

அர : முனிவரே உன் வேண்டுகோளை நான் ஒப்புக் கொள்கிறேன். நான் பஞ்சம் இனத்தைச் சேர்ந்தவனுக்குக் காட்சியளிக்க மாட்டேன். ஆனால் நீ அவனுக்கு என்னை தரிசிக்கும் பாக்கியத்தை ஏற்படுத்தித் தா.

உலோ : அதெவ்வாறு முடியும் ?

அர : என் பக்தன் என்னைப் பார்க்க வரக்கூடாதா ?

உலோ : ஆமாம் பரந்தாமா ! அதற்கு எங்கே அவகாசம் இருக்கின்றது.

அர : நீயே அதற்கு அவகர்சம்

உலோ : அது எப்படி ?

அர : உன் வேண்டுகோளுக்கு இணங்க நான் திருப்பாணனுக்குக் காட்சி தரமாட்டேன். ஆகையால் திருப்பாணன் தானாக வந்து இந்த ஆலயத்தில் என்னைப் பார்க்கலாம்-

உலோ : அது முடியாது

அர : ஏன் முடியாது ?

உலோ : பஞ்சம இனத்தைச் சார்ந்தவன் இல்லையா சுவாமி

அர : என் பக்தன் தானே !

உலோ : இருக்கலாம்

அர : என் தரிசனத்திற்காகக் காத்துக் கொண்டிருப்பவன் இல்லையா ?

உலோ : இருந்தாலும் சரி.

அர : என் தியானத்தில், தீட்சையில் மூழ்கினவன். பக்திப் பரவசமானவன். என்கவிஞன், என் பாடகன், என் நண்பன்.

உலோ : என்ன நண்பனோ ! என்ன ஆவதோ ஆகட்டும். உங்களை இந்த ஆலயத்தில் பஞ்சம இனத்தைச் சார்ந்தவன் தரிசிப்பது முடியாத காரியம்.

அர : என் பக்தன் என்னைத் தரிசனம் செய்தேயாக வேண்டும்.

உலோ : இந்தக் கோயிலில் அது நடக்காது:

அர : திருப்பாணனுக்கு என்னைத் தரிசனம் தரவேண்டாம் எனக் கூறினாய், ஏற்றுக் கொண்டேன். திருப்பாணன் என்னை இக்கோயிலில் தரிசனம்-

உலோ : அது முடியாது

அர : ஏன் முடியாது

உலோ : என் சுவாமி மண்டபம், பஞ்சமன் நுழைதலால் அசிங்கம் ஏற்படக் கூடாது.

அர : எனக்கு எந்த மாசும் அசிங்கமும் ஏற்படாது

உலோ . உங்களுக்குத் தெரியாது

அர : முனிவரே என் சொல்லைக் கேளும்- எனக்கு மாசு வந்து சேராது.

உலோ : சேராமல் போகலாம்

அர : அதற்காக. . .

உலோ : பவித்திர மண்டபத்தில் மாசு சேரும் விதத்தை. . . .

அர : மனிதனுக்கும் மாதவனுக்கும் இடையே தீட்டு (மாசு) என்பது கிடையாது.

உலோ : ஆனால் பஞ்சமனுக்கும் பவித்திர, ஆலயத்திற்கும் இடையே மாசு உண்டு

அர : இறைவனுக்கே ஒட்டாத மாசு கோயிலுக்கும் ஒட்டாது.

உலோ : கோவிலுக்கு வந்த மாசு தேவனுக்குச் சேர்ந்த விதத்தை

அர : முனிவரே கேள் எனக்கு எந்த மாசும் வந்து சேராது. என்ன சொல்கிறேன் என்று புரியுதா ?

உலோ : நீங்கள் என்ன வேண்டுமானாலும் கூறுங்கள். மாசு வராமல் போகாது. ஆனால் கோயிலில் பஞ்சம இனத்தைச் சேர்ந்தவன் நுழையக் கூடாது.

அர : அவன் என் பக்தன்

உலோ : கோயில் எங்களுடையது

அர : கோயில் என்னுடையது

உலோ : இல்லை- அது எங்களுடையது

அர : அது எனக்காக ஏற்படுத்தப்பட்டது

உலோ : இல்லை- அது எங்களுக்காக ஏற்படுத்தப் பட்டது.

அர : அந்தக் கோயிலில் இருப்பவன் நானே.

உலோ : கோயில் என்றால் எங்களுடைய பக்தி என்றே அர்த்தம்

அர : அந்த பக்தி என்னை ஆராதிப்பதற்காக இல்லையா ?

உலோ : நாங்கள் ஆராதிப்பது உண்மையில் உங்களையே இருக்கலாம். கோயிலை ஏற்படுத்தியது நாங்கள். கோயில் எங்கள் அனைவருடைய இதயம். உண்மையில் சொல்லப் போனால் அது எங்கள் இதயக் கோயில்

அர : பூசை எனக்காக இல்லையா ?

உலோ : பூசை செய்யும் இதயம் எங்களுடையது

அர : அதில் வதிபவன் நான் இல்லையா ?

உலோ : உண்மையே. அங்கு இருப்பது நீங்களே. ஆனால் நீங்கள் அங்கு இருப்பதும் எங்களுக்காகவே.

அர : நீங்கள் என்பது பக்தர்கள் இல்லையா ? கோயில், பக்தர்கள் இருப்பது எனக்காத் தான்.

உலோ : நாங்கள் உங்களுக்காக இல்லை. எங்களுக்காகத் தான்

நீங்கள். எங்களைப் பாதுகாப்பதற்காக, எங்களை வாழ்விப் பதற்காகவே நீங்கள் இருக்கின்றீர்கள்.

அர : சரி நீங்கள் இருப்பது

உலோ : எங்களுக்காகத்தான்.

அர : உங்கள் பூசை எல்லாம்

உலோ : எங்களுக்காக

அர : இந்தப் பூசைகள் எல்லாம் யாரை உத்தேசித்து நடத்தப் படுகின்றன

உலோ : உங்களையே- ஆனால் எங்களுடைய திருப்திக்காக ஆனந்தத்திற்காக

அர : உங்களுக்கு ஆனந்தம் இல்லையா.

உலோ : இல்லாமல் கூட போகலாம்

அர : வருத்தம்

உலோ : இருக்கலாம்

அர : வருத்த நிவாரணத்திற்காக

உலோ : ஆமாம். அதற்காகவே, பூசைகள், துதிகள், தோத்திரங்கள். இந்த ஆராதனைகள் எல்லாம் எங்கள் இதயத்தைத் தூய்மை செய்து கொள்வதற்காகவே.

அர : சரி என்னுடைய திருப்தி

உலோ : எங்களுக்குத் தேவை. எங்களுக்கு விருப்பம்

அர : எனக்குச் சந்தோஷம் இல்லாமல் போனால்

உலோ : எங்கள் இதயம் சுமையாக மாறும் - உண்மையே.

அர : உங்கள் பூசை உங்களுக்காகவே

உலோ : அது உண்மை

அர : நான் இருப்பது உங்களுக் காகத்தான்

உலோ : அது உண்மைதான்

அர : நான் இங்கு இருப்பது உங்கள் மனநிலையைப் பொருத்து தான்.

உலோ : அது உண்மை. நாங்கள் கோயில்- நீ சிலை. மனது கோயில் நீங்கள் எங்களுக்காக.

அர : சரி; ஏற்றுக் கொள்கிறேன். நான் உங்களுக் காக எனக் கூறினாய் இல்லையா ? உங்களுக்காக இருக்கும் என்னை, என்னுடைய வேண்டு கோளை நிறைவேற்றியே ஆக வேண்டும்.

உலோ : உங்களுக்காக வாழும் நாங்கள் செய்யும் வேண்டுகோளை நீங்களும் கேட்டே ஆக வேண்டும்.

அர : கேட்காமல் போனால்

உலோ : எங்கள் இதயக்கோயிலில் இடமில்லை

அர : நான் இந்தக் கோயிலுக்குள் இருக்காமல் போனால்

உலோ : முப்பது முக்கோடி தேவர்கள் இருக்கின்றனர்

அர : உங்கள் இதய பக்தி ?

உலோ : மாறியே தீரும்

அர : மனம் அவ்வளவு நிலையானது இல்லையா ?

உலோ : பக்தி நிலையானதுதான். இறைவன் மனம் மாறுகின்றவன் நிலையற்ற இறைவன் மாறுகிறான். பக்தி மட்டும் மாறாதது.

அர : நான் கோயிலில் இல்லாத நாளில், நீங்கள் சொல்லிக் கொள்ள ஒன்றுமில்லை; கதியுமில்லை.

உலோ : நாங்கள் இல்லாத நாள் உனக்குத் துணையும் இல்லை; கோயிலும் இல்லை

அர : நீங்கள் எல்லோரும் என்னை ஆதாரமாகப் பற்றிக் கொண்டு வாழ்கின்றீர்கள், இதெல்லாம் என் அனுக்கிரகமே

உலோ : இல்லையெனக் கூறினேனா சுவாமி. ஆனால் இந்த ஆலயத்தில் நீங்கள் எங்களை ஆதாரமாகக் கொண்டு புகழ் பெற்றீர்

அர : இந்தக் கோயில் இல்லாமல் போனால் கூட நான் இருப்பேன்

உலோ : எங்களுக்காக இருக்க மாட்டீர்கள். எங்களுக் கென்று இருப்பதாக இருந்தால் இந்த ஆலயத்தில் இருக்க வேண்டும். இந்த ஆலயம் அதற்காகவே இருக்கின்றது ஆலயம் என்றால் நாங்கள். நீங்கள் இருப்பது எங்களுக்காகவே, நீங்கள் இல்லாமல் போகும் நிலை வந்தால் நீங்கள் இங்கு இருக்க மாட்டீர்கள். அதற்காக எம் பக்தி உனக்குச் சிறையாகும். உன்னை இங்கிருந்து அசைய விடமாட்டோம். வெளியே செல்ல அனுமதிக்க மாட்டோம். வேற்று மனிதர்களை உள்ளே வர அனுமதிக்க மாட்டோம். அது எங்கள் விருப்பம் உங்கள் விருப்பத்திற்கு இங்கு இடமே இல்லை. ஆனால் உங்கள் விருப்பம் எங்கள் விருப்பத்திற்கு ஏற்ப இருக்க வேண்டும். நாங்கள் இருப்பதால் உனக்கு இங்கு அடையாளம் உண்டு. இது எங்கள் இதயம். இதயமே நீங்கள் இருக்கும் இடம். இது கோயில் மாசுபடக் கூடாது. உம் வேண்டு கோளுக்கும் எம் வேண்டுகோளுக்கும் இடையே வேறுபாடு தோன்றுமாயின் வெற்றி பெறுவது எங்களுடைய வேண்டுகோளே. உம் வேண்டுகோளை நிறைவேற்று பவரும் நாங்களே. ஆகையால் உம் வேண்டுகோளைக் கூட நிறைவேற்றுவோம். எப்பொழுதெனில் எங்களுக்கு, ஏற்புடையதாக இருந்தால் நிறை வேற்றுவோம். இப்பொழுது நீர் கூறியது எங்களுக்கு விருப்பம் இல்லை. எனவே, நிறைவேறாது என்னானாலும் பார்ப்போம்.

அர : உங்கள் கோயில் மேல் உங்களுடைய பற்று நியாய மானதுதான்.

உலோ : அது என்ன வார்த்தை ?

அர : என் பக்தனின் மீது நான் அன்பு வைத்திருப்பது நியாயம்தான்.

உலோ : உன் பக்தன் பஞ்சம இனத்தைச் சேர்ந்தவனாக இருந்தாலும் அவன்மீது எங்களுக்கு அன்பு உண்டு.

அர : பஞ்சமன் என்ன பாவம் செய்தான் ?

உலோ : எங்களை நீ கேள்வி கேட்கக் கூடாது. இது உலக ஆசாரம்.

அர : முனிவனே ! திருப்பாணனுக்கு நான் காட்சியளிக்கக் கூடாது. அவன் பாதத் துளிபட்டு கோயில் மாசுபடக் கூடாது. அவ்வளவுதனே !

உலோ : அதேதான் அவன் இங்கே வரக்கூடாது.

அர : எந்தவிதத்திலும் நான், என் பக்தனின் தரிசன வேண்டுகோளைத் தீர்க்க வேண்டாமா ?

உலோ : நேரடியாகக் காட்சியளிக்காமல் மறைமுகமாக. . .

அர : அதற்கு நான் ஒரு சிறந்தவழி கூறுகின்றேன் முனிவரே, நாளைக் காலை சூரியன் உதிப்பதற்கு முன் திருப்பாணனை என் பூசைக்கு, நீ உன் தோள்மீது சுமந்துவர வேண்டும்.

உலோ : எம்பெருமானே ! தேவர்களுக்குத் தலைவனே !

அர : இதனால் உங்கள் கோயில் மாசு படாது.

உலோ : எம்பெருமானே ! திருவரங்கனே !!

அர : அப்பொழுது திருப்பாணனின் வேண்டுகோளும் என் எண்ணமும் பலிக்கும்.

உலோ : எம்பெருமானே, உன் எதிர்பார்ப்பு எனக்கு முழு விருப்பமே.

அர : திருப்பாணன் விருப்பம் அவ்வளவு கடினமானதா ?

உலோ : அது எனக்கு விருப்பம் இல்லை

அர : பிறகு

உலோ : இந்தத் தோள்கள் புண்ணியக்காவேரி நதித் தண்ணீரைச் சுமக்க மட்டுமே ஒத்துக் கொள்ளும், பிறவற்றை அல்ல.

அர : உண்மையே

உலோ : தூபம் தீபம் நைவேத்தியம், நாடோறும் நடக்கும் பூசை

சாமான்கள் முதலியன சுமந்துவர மட்டுமே என் தோள்கள் பயன்படும்.

அர : உண்மையே.

உலோ : இப்படிப்பட்ட தோள்களுக்கா இந்தத் தண்டனை.

அர : அது தண்டனை அல்ல; சுபகாரியம்.

உலோ : பஞ்சமனைச் சுமத்தல் . . .

அர : அது என் பக்தனின் மெய்தொடும் இன்பமாகும்

உலோ : பஞ்சமன் என்னைத் தொட்டுவிட்டால் என் உயிர் போய் விடும்

அர : முனிவரே ! உன் கோரிக்கைகளை ஒப்புக் கொண்டேன். நான் எத்தனை அங்கீகரித்தாலும் நீங்கள் அனைத்தையும் மறந்து விட்டீர் ! இப்போது உன் மீது பரீட்சை.

உலோ : சுவாமி, பலமில்லாதவன் மேல் பரீட்சையா ?

அர : பலஹீனத்தின் மேலே ! நாளைத் திருப்பாணனைத் தூக்கி வா.

உலோ : தூக்கி வர முடியாது. என் வாழ்க்கை, உடல் புனிதமானது. நான் பஞ்சமனைத் தொடுதலால் மாசுபட மாட்டேன்

அர : என் தியான தீட்சையினால் திருப்பாணன் தூய மனமுடை யோனாய் விளங்கு கின்றான்

உலோ : அவன் ஜன்மம் புனிதமற்றதும், தோஷமுடையதும் தீண்டத்தகாததாகும்.

அர : எடுக்கும் பிறவியினால் இல்லை; கர்மத்தினால் புண்ணிய பாவங்கள் வந்து சேரும் திருப்பாணன் புனிதமானவன்.

உலோ : தூக்கிக் கொண்டு வருதல் என்னுடைய வேலை இல்லை.

அர : எனக்காக உனக்கு இந்த வேலை தவிர்க்க முடியாது

உலோ : உனக்காக, இதுவில்லாமல் வேறெதுவானாலும் செய்கின்றேன்.

அர : உன்னுடைய வேலையா ? என்னுடைய வேலையா ? எது முக்கியம்.

உலோ : (முணுமுணுப்புடன்) ஊன் வேலைதான்

அர : இனி உன்னுடைய விருப்பம் பலிக்காது சூரியோதய நேரத்தில் உன் வரவு நிச்சயம். எதிர்பார்ப்பேன்.

**(திருவரங்கனின் முகம் சிவத்தல்)**

உலோ : எம்பெருமானே ! என்ன அந்த முகத்தில் சிவப்பு. உன் பார்வை இரத்தச் சிவப்பில் உள்ளது. உன் முகத்தை இந்த நிலையில் என்னால் பார்க்க முடியவில்லை. (திருவரங்கன் நெற்றியில் இரத்தம்) திருவரங்கனே என்னே அந்த இரத்தம் என் தவறு என்ன ?

**(திருவரங்கன் நெற்றியில் இரத்தம் ஒழுகுதல்)**

என்ன அடி ? பிரபுவே என் தப்பு என்ன ?

அர : இது உன்னால் அடிக்கப்பட்டது.

உலோ : பிரபு ! நானா உன்னை வருத்தியது. இதென்ன அறியாயம் பரமாத்மா ? இரத்தம் ஒழுகுவதை என்னால் பார்க்கமுடியவில்லை நிறுத்தமாட்டாயா பரந்தாமா ?

அர : இரத்தத்தை நிறுத்த முடியும்.

உலோ : உடனே செய்துமுடி, இறைவனே. இரத்தம் ஒழுகுவதை நிருத்து தந்தையே.

அர : வாக்கு தானம் செய்வதாக இருந்தால்

உலோ : என்ன வென்று

அர : திருப்பாணனைச் சுமந்து வருவேனென்று . .

உலோ : ஐயோ ! அதென்ன ஒழுகுதல் ! ஒழுகின இரத்தத்தைப் பார்த்தால் பூதேவி பொறுக்கமாட்டாள் எம்பெருமானே. அந்த இரத்தத்துளி நிலத்தின்மீது விழுந்தால் தரணி எரிந்து அழிந்துவிடும். தந்தையே !

அர : வாக்கு தானம் -

உலோ : அதென்ன இரத்தம் - வாக்கு தானம் செய்கிறேன். நிறுத்து இறைவனே - ஐயோ இரத்தம். திருப்பாணனைத் தோள் மேல் சுமந்து வருகிறேன்.

வாக்குக் கொடுத்து விட்டேன் இறைவனே !

அர : உன் தரிசனமே ! நாளை விடியற்காலை தரிசனம்

உலோ : உன் ஆணை

**(திருவரங்க நாதன் மறைந்து போதல்)**

உனக்காக உயிர் தரித்தேன்
உனக்காக என்வாழ்வை நிருத்தினேன்
எனக்காக நீ இந்தப்பக்கம் வந்தாயோ
எனக்காக நீ இந்தத் தண்டனை பெற்றாயோ
வராமல் வராமல் நீ வந்ததால்
என் இதயம் தாண்டவ மாடியது
கேட்காத அதைக் கேட்ட உடன்
என் இதயம் நழுவியது,
என் வேண்டுகோள் அழிந்தது.
உன் வேண்டுகோளை நானே நிறைவேற்றுவேன்
என் கோபத்தை என்னால் பார்க்கமுடியுமா ?
நீ கேட்டதை உனக்காகச் செய்வேன்
இனி இந்தப் பூமியில் உனக்காக வாழ்வேன்
தீண்டத் தகாதவனை தூக்கி வருவேன்
என் இதயத்தில் சேர்த்துக் கொள்வேன்
உன் வரவைப் பக்தியால் துதிப்பேன்
எனக்கு மாசு வந்து சேர்ந்தாலும்
உன் வேண்டுகோளை விறைவில் தீர்ப்பேன்
அவனைக் கோயிலில் கொண்டுவந்து சேர்ப்பேன்

**(திரை)**

**(திரையில்)**

வேத : இனித் திருப்பாணன் விசிஷ்டம் பெறுவான் முனிக்கு புண்ணிய லோகம் வகிக்கும் இனி திருவரங்கன் பூமியில் நடந்து பக்தர்களுக்குத் தரிசனம் கொடுப்பார்

உற்பத்தி பன்ன எண்ணி
அனைவரையும் ஒன்றாய்ச் சேர்த்து
ஆதி சக்தி நாட்டியம் செய்து

அவனியில் பக்தியை நிறுத்தி
பக்தர்களுக்குத் தரிசனமளிக்க
பவித்திரமான எண்ணத் துடன்
துன்மார்க்க ஆன்மாக்களைக் கண்டு
அவற்றிற்கு வீடு பேறளித்து
அவதாரம் எடுத்து அவனியிலே
சன்மார்க்க மக்களைக் காப்பாற்றி
அவனியில் திரிந்து ஆன்மாக்களைக் காத்து
பூமியில் வாழ்ந்து அன்புடன் நின்று
உலக யுயிர்கள் ஒளியுடன் விளங்க
நில யுயிர்கள் நன்மை வேண்டி
சர்வ சமயங்கள் மகிழ்ச்சியுடன் இருக்க
தேவர்த் தலைவன் புண்ணியவான் இவன்
இயக்கமற்ற இயங்கும் இவ்வுலகில்
எவன் இதயத்தில் நிறைந்து
அமிழ்ந்து கிடக்குமோ ?
சர்வ மனித சமுதாயத்தில்
எவன் பாவத்தை அழிக்க
மேலெழுந்து வருவாரோ ?
சர்வ ஆன்மா சந்தோஷமுடன்
எவர் எதிரில் சரணம் என
விழுகின்றதோ ?
சர்வ யோகங்களின் இனிமை
சத்தியம் அனைத்தும் யார்
பாத்தில் விழுகின்றன வோ
அவனே விஷ்ணுமூர்த்தி
அந்த விஷ்ணுவே
பூசாரியை வேண்டுதல்
எந்தப்பூர்வ காலப் புண்ணிய பலனோ !

**ஐந்தாவது அங்கம் - முதல் களம்**

இடம் : காவேரி நதிக் கரை

**(திரையில்)**

திரு : தேவனே ! எனைக் காப்பாற்ற
இரங்கி வரமாட்டாயா
சுவர்க்கத்திலிருந்து பூமிக்கு எனைச் சேர
இறங்கி வரமாட்டாயா
உன் கண் எனக்குச் சூரிய
பிம்பம் போன்ற தய்யா
உன் ஒளி என் சாந்தியாகும்
அது எப்போதும் எனதய்யா
திருவரங்க நகரில் விளங்கும்
பூக்களே நீயாவாய்
உன்னில் தோன்றிய ஒளி
இந்தப் புவி யொளியாவாய்
உன்னை எனக்குக் காட்டு
ஞானக்கண் கொடுப்பாய் திருவரங்கனே
என்னை உனக்கு அர்ப்பனம் செய்ய
கரம் அளிப்பாய் திருவரங்கனே

**(உலோக சாரங்கமுனி உள்ளே நுழைதல்)**

உலோ : ஸ்ரீரங்கன் சிலை நிறுத்த வேண்டினேன்
சிலை நிறுத்திக் கோயிலைக் கட்டினேன்
ஸ்ரீரங்கனைக் பூஜை செய்ய வேண்டினேன்
சேவித்து நல்வாழ்க்கையைப் பெற்றேன்
திருவரங்கனுக்குத் தண்டனை கொடுத்து
அவனுள்ளே விளங்கும் ஒளியைக் கண்டேன்
திருவரங்கன் மோட்சம் அளிக்க வேண்டி
மோட்சம் அளித்து மக்களைக் காப்பாற்றினான்
பூசாரி மகனாகப் பிறந்து
நிஷ்டை வாழ்க்கை நெறியறிந்து

தூய அறிவு தத்துவப்பொருள் அறிந்து
நியம நெறியில் நான் வாழ்வது உண்மையே
சுவர்க்கத்தில் இருக்கும் விஷ்ணுவே
பூலோகத்தில் உயிராய்ப் பிறந்து
வேதத்தின் இறுதி அறிந்து
பூலோக ஒளியாய் மாற்றி
கோயில் எம்பெருமானாக
கோயில் வெளியே பக்தனாக
சொல்லக் கூடிய பரமார்த்த
வார்த்தை அறிந்து
தூய ஆடை அணியும்
தத்துவத்தை அறிந்து
கடைச்சாதியில் பிறந்தவனின்
கதையை அறிந்து
ஏமாறும் மனது உடையவரே
கஷ்டத்தில் வாழ்கின்றனர்
பொட்டு வைக்கும் வேளை வந்தது
திலகம் வைக்க அருகில் சென்றேன்
கண் கொடுத்த அரங்கனே எனக்கு
ஞானக் கொடுத்தான் மானிடனே !

**(திருப்பாணனின் அருகில் செல்லல்)**

மகாபக்தனே ! திருப்பாணா !!

திரு : தேவனே ! என்னை அழைத்தாயா ?

உலோ : இங்கே பார் உன்னையே

திரு : முனிவரே பார்க்கக்கூடாத என்னைப் பார்த்தீர்களா
கூப்பிடக் கூடாத என்னைக்கூப்பிட்டீர்களா !!

உலோ : மகாகவி - இந்திரனே - சந்திரனே
ஸ்ரீ மகாவிஷ்ணு உன்னை ஆசீர்வதித்தார்

திரு : எவ்வளவு இனிமையான வார்த்தை; எவ்வளவு பாக்கியம்

உலோ : பாக்கியம் எனக்கே திருப்பாணா ! மகாவிஷ்ணு எனக்கு அனுக்கிரகம் கொடுத்தார்

(திருப்பாணனின் தோளைத் தொட்டார்)

திரு : என்னைத் தொடுதல் - அமிழ்தம் போன்ற தங்கள் திருக்கைகளால் என்னைத் தொடுதல் எவ்வளவு இனிமையான சுகம்.

உலோ : உன்னைத் தொட்டவுடன் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சியாக உள்ளது

திரு : தீண்டத்தகாதவனைத் தீண்டி நீங்கள் மாசுபடக் கூடாது முனிவரே.

உலோ : மாசுபடக்கூடிய இதயம் கொண்டவர்களுக்கே மாசு உடம்பைச் சேரும். உன் உடம்பு பரிசுத்தமானது திருப்பாணனே

திரு : என்னே என் பாக்கியம். உன் ஆதாரம் பெற்ற நான் பாக்கியம் பெற்றவனாவேன்

உலோ : பாக்கியம் என்னுடையது; ஆனந்தம் என்னுயைது அதிஷ்டம் என்னுடையது. திரிலோக பூசைக்குரியவன், திரிகால ஞானி, திரிகால தத்துவம் அறிந்தவன், ஸ்ரீ மஹாவிஷ்ணுவின் வரப்பிரசாதம் கூட என்னுடையதே. நீ கோயிலின் உள்ளே வர வேண்டும்.

திரு : நானா, திருவரங்கம் கோயில் உள்ளே. . .

உலோ : ஆமாம்

திரு : பாக்கியம் என்னுடையதே, ஆனால் முனிவரே அது இயலும் காரியமா ?

உலோ : இறைவன் கருணைக்கு நடக்காதது என்ன இருக்கின்றது

திரு : நான் தீண்டத் தகாதவன் இல்லையா ?

உலோ : அப்படி ஸ்ரீ மகாவ்விஷ்ணு நினைக்கவில்லை

திரு : நீங்கள் என்னை உள்ளே அனுப்ப மாட்டீர்கள்

உலோ : நாங்கள் உன்னை உள்ளே அனுப்ப மாட்டோம். ஆனால் அழைத்துக் கொண்டு போவோம்

திரு : நான் வராமல் நீங்கள் அழைத்து போவது எவ்வாறு ?
உலோ : தூக்கிச் செல்வேன்
திரு : யார் ?
உலோ : நான்
திரு : யாரை ?
உலோ : உன்னை
திரு : அதெவ்வாறு இயலும்
உலோ : என் தோள் ஆசனம் மேல் உட்காருவதனால் அது இயலும்.
திரு : அது நியாயம்தானா
உலோ : தெய்வ காரியம்
திரு : உங்களுக்குச் சம்மதமா ?
உலோ : எம்பெருமான் விருப்பம் அதுவே
திரு : இது நடக்குமா ?
உலோ : நடந்தே தீரும்; வழியே இல்லை
திரு : என்னால் வரமுடியுமா ?
உலோ : வந்தே ஆக வேண்டும்
திரு : தேவனே ! இதுவா உன் லீலை. தீண்டத் தகாதவனை, ஆலயத்தைத் தூய்மை செய்ய வியலாதவனை- உங்கள் தோள்மேல்- திருவரங்கா என்னால் முடியாது
உலோ : நீ பஞ்சமன்தான், கோயிலுக்குள் அனுமதிக்கக் கூடாது. நீ பக்தன் கவானைத் தரிசனம் செய்தல் நியாயம்தான். ஸ்ரீ அரங்கநாதன் உன்னைப் பார்க்க விரும்புகின்றான் அதுவே ஆணை. அந்த வேண்டுகோளை நிறைவேற்றுதல் என் கடமை. அதற்கு இதுவே வழியாகும். நீ என் தோள்மீது அமர்ந்து கோயிலுக்குள் வந்தால் கோயிலுக்கு மாசு வந்து சேராது; தீட்டு இல்லை. ஸ்ரீ அரங்கநாதன் வேண்டு கோளுக்கு உன் ஆசைக்கு என் கடமைக்கு இதுவே வழியாகும்.

திரு : பவித்திரமானவர்களைப் பவித்திர மற்றவர்களாக நான் பார்க்க மாட்டேன்.

உலோ : நல்லது, கெட்டது, பவித்திரமானது, அபவித்திரமானது, தர்மம், அதர்மம் இவை யெல்லாம் அறிந்தவன், அதர்மத்திற்குத் தலைவன் திருவரங்க நாதன் என்னும் ஸ்ரீ மகாவிஷ்ணு. எனக்கு மட்டும் எவ்விதக் கருத்து வேற்றுமையும் இல்லை. நீ பார்த்து வருத்தப்படும் அளவுக்கு எதுவும் நடக்காது.

திரு : பார்க்கக் கூடாத, கூப்பிடக் கூடாத நினைக்கக் கூடாத, தொடக்கூடாத பஞ்சம இனத்தைச் சேர்ந்தவனான நான் ஸ்ரீ ரங்கநாதர் கோயிலின் தர்மகர்த்தா, உயர்ந்த பிராமணன், உலோக சாரங்கமுனியின் தோள்மேல் அமர்ந்து செல்லல் இறைவனே ! இது உன் வேடிக்கையா இது உன் விளையாட்டா ?

இது என்ன விந்தை - தேவனே
இது என்ன ஆட்டம்
வெண்ணெய் உருண்டை விழுங்கிய இறைவனே
வெண்ணிலவை யமுனை நதியில் மறைத்தவனே
புல்லாங்குழல் உயிர் கொடுத் தூதி
இனிமையாகஇதயத்தைக்கட்டியஇறைவனே! (இது)
பசுக்களுக்கு இரையைத் தேடிய வனே
கோபிகைகளின் மானத்தை நிலை நிறுத்தியவனே
ஆயர்களின் வாழ்வில் நிலவை வைத்து
அவர்களின்உயர்வுதாழ்வை சமமாக்கிய வனே (இது)
கல்லைப் பெண்ணாக மாற்றின வனே
இலங்கைக்குச் சொர்க்கத்தை அளித்த வனே
இராட்சசர்களின் ஆட்சியை மாற்றி
நல் வாழ்க்கையை அமைத்துத் தந்தவனே (திரு)

(திரை)

(திரையில்)

வேத : விஷ்ணு பக்தி·மஹிமை
உலகம் அனைத்தும் பரந்து
கேட்க பார்க்க ரசிக்க
இப்பொழுது இயல்பாய் இயன்றது
பக்த ஜனங்கள் வேண்டுகோள்
பரமாத்மாவின் உருவமாக மாறி
பூமியில் பிரகாசமாக ஒளிர்ந்தது
சத்தியமே உண்மையே அனைத்துமாக
பிறந்து வாழ்வதை விளக்கியவன்
தர்மமாக நியாயமாக புண்ணியமாக
ஆண்பெண் களுக்கு ஞானியாக நின்றவன்
வீரனாக தீரனாக ஞானமாக
நாற்புறமும் திரியும் ஒளியாக
ஜீவர்களுக்கு ஆன்மாவாக விளங்குபவன்
ரவி யொப்ப ஒளி பெற்றவன்
பிரணவமாக பிரணவமந்திரமாக ஒங்காரமாக
உண்மையை உணரும் உயர்ந்த பக்தியாக
தீவிர பக்தியில் ஒளிரும் சின்னக் கண்ணன் அவன்
மனிதத் துயரை வெள்ளமாக ஓடிவந்து நிறைவு செய்யும்
விஷ்ணு அவன்; மகாவிஷ்ணு அவன்
தெய்வ சங்கல்பம் பலம் வாய்ந்தது
விஷ்ணுபழம் புவி வலிமை வாய்ந்தது
ஜனங்களின் பக்தி வலிமை வாய்ந்தது
சர்வஜீவராசிகள் கூட்டம் சக்தி வாய்ந்தது
அவனியில் யார் வேண்டுகோள் தீராமல் இருந்ததோ
அவன் விஷ்ணு பக்த னாயினான்

பூமியில் யார் பக்தி புண்ணியத்தைச் சேராமல் இருந்ததோ
அவன் பக்திக்குப் பாத்திர மாயினான்
அவன் நடந்தால் தோஷமென்று
சிரிக்கும் ஜனங்கள் கோடிபேர்
அவன் நடக்கும் பாதையைப் புனிதமென்று
இனி வாழ்த்தும் இயல்போர் பலர்.
இப் பாக்கியம் யாருக்கு வாய்க்கும்
விதியை யாராலும் வெல்ல முடியாது

**ஐந்தாவது அங்கம் - இரண்டாம் களம்**

இடம் : திருவரங்கம் கோயில் (உலோக சாரங்கமுனி தோள்மீது திருப்பாணரை ஏற்றிக் கொண்டு திருவரங்கம் கோயில் உள்ளே நுழைதல்)

உலோ : அங்கே புண்ணியம் அங்கே தர்மம் அங்கே சத்திய மார்க்கம்
ஸ்ரீ ரங்க ரங்கனே வீணானதை யழிப்பாய்
அதுவே பாட்டு அதுவே ஆட்டம் அதுவே விழிப்பு
ஸ்ரீ ரங்கரங்கனே சிக்குகளை அறுப்பாய்
இங்கே காந்த (ஒளி) இங்கே சாந்தி (அமைதி) இங்கே திவ்ய அநுபூதி
ஸ்ரீ ரங்க ரங்கனே வருத்தத்தைத் தீர்ப்பாய்
இதுவே மாயை இதுவே ஆட்டம் இது உனக்குத் தகுமோ
ஸ்ரீ ரங்க ரங்கனே என் வருத்தத்தைத் தீர்ப்பாய்
பழைய சம்பிரதாய வழக்கத்திற்கு
உயிராக வாழ்ந்து வந்தேன்
ஒளியைத் தேடினேன் அரங்கன்
ஒளியை தேடித் திரிந்தேன்
புத்தொளி ஒளிர்ந்து புது நிலவைத்
தலையில் சூடினேன்
புத்தொளியுடன் கோயிலில் நடக்கின்றேன்
கோயில் மணி ஒலிக்கின்றது

தேவ : உலோக சாரங்க முனிவர் திருப்பாணரைத் தோள்மீது சுமந்து கொண்டு வருவதல் - கோயில் உள்ளே நுழைதல் எவ்வளவு ஆச்சரியம்

வேத : இன்னும் உனக்கு மாயை விலக்கியதாகத் தெரியவில்லை. பெரிய பக்தனை முனிவர் சேவிக்கின்றார். திருப்பாணர் பக்தி எவ்வளவு உயர்ந்தது. அவரின் பாடல்கள் எவ்வளவு இனிமை வாய்ந்தன.

தேவ : அவை பாடல்களா ? சுவர்க்கத்தில் இருக்கும் கங்கையின் நீரலைகள். எனக்கு அமிழ்தத் திவலைகள். நான் அந்தப் பாடல்களை எழுத்துவடிவில் வடிக்கின்றேன். அது எதிர்கால மக்களுக்கு விஷ்ணுவின் பாதயொளிக்கு இலக்கிய சம்பிரதாயத்திற்கு வாரிசாக உருவாக்குவேன்.

வேத : உங்களின் அந்த ஆலோசனை உன் மனிதத் தன்மைக்குப் பரமார்த்தம். திருப்பாணர் முகம் எவ்வளவு பிரகாசமாக உள்ளதோ பார் ? அந்தப் பிரகாசமான ஒளி எல்லாக் காலத்திலும் நிற்க வேண்டும். மகாகவி திருப்பாணர் ஆவேசமே உன் எழுத்து வடிவம். அதுவே இனி வைணவ இலக்கியம்.

திரு : ஸ்ரீ மஹா விஷ்ணுவே, ஸ்ரீ ரங்கநாதா, ஸ்ரீ பரந்தாமா, என் அரங்கனே ! உன் கருணைக்கு ஒரு எல்லை இல்லையா ? தேவனே இந்தளவு பாக்கியத்தை, இந்த அழியும் உடல் சுமக்கும் ? இந்த அதிர்ஷ்டத்தை என்னால் பெற்றுக் கொள்ள இயலுமா ? ஸ்ரீ ரங்கா என் அரங்கனே ! என் திருவரங்கனே.

உலோ : என் உடல் பாக்கியம் பெற்றது. என் வாழ்க்கை பரமானந்த வாழ்க்கை. ஸ்ரீ மஹாவிஷ்ணு வேண்டின பக்தனை, திருப்பாணர் கேட்ட ஸ்ரீ ரங்கநாதனைத் தரிசிக்கச் செய்துவிட்டேன். தோள்மேல் பக்தனைத் தூக்கிச் செல்லுதல் எவ்வளவு அதிஷ்டம். அசைய வேண்டாம் - இறங்க வேண்டாம் திருப்பாணரே. உன் கடவுளைக் கண்ணாரப் பார். இதோ உன் பக்தன்

ஸ்ரீரங்கநாதரே - தரிசனம் செய்வதோடு அவன் கூறும் வார்த்தையைக் கேட்டு ஆனந்தம் கொள்

திரு : அமலன் - உன் பக்தர்களுக்குச் சேவகன்

நிமலன் - உன் தாசர்களுக்குத் தாசன்

தேவன் - தேவர்களுக்குத் தலைவன்

தலைவன் - வேகண்டி பருவதத்திற்குத் தலைவன்

நிர்மலன், நீதிமான், நித்தியமானவன், நிர்விகர்பம்

பொருந்தியவன் - கண்ணில் கருமணி போன்றவன்

இறைவனே என் கண் தாமரை உன் பாதத்தாமரையுடன்

சேருகின்றது. ஆனந்தம் பெறுகின்றது தந்தையே ?

வேத : இதென்ன ஆவேசம் ! இதென்ன பக்தி !

தேவ : எத்தனையோ பரம்பரையாக இறைவனை, எம்பெருமானைப் பார்க்காத சாதியின் வேதனை! வேதனைகளின் கூட்டுருவமே இவர். திருப்பாணர் ஒரு மனிதர் இல்லை; மனிதர்க்ளின் கூட்டுச் சங்கம்.

உலோ : இந்தப் பக்தனின் வேகத்திற்கு எலும்புகூட தாங்காது இறைவனே ! திருப்பாணரே நீ உம் எம்பெருமானைத் தவிர எம்மோடு பேசமாட்டாயா ? சரி ஆகட்டும்

திரு : மூன்று உலகங்களையும் தாண்டி எல்லா உலகங்களிலும் எல்லா மூலைகளிலும் நிறைந்திருப்பவனே ! பிரம்மாதி தேவர்களுக்குத் தேவனே ! பூஜை செய்யத் தகுந்த பாதம் பொருந்தியவனே ! இராவணனைக் கொல்ல ஆயிரம் பாணங்களை எய்தவனே ! நல்ல வாசனை பொருந்திய உய்யான வனத்தில் விளங்கும் இறைவனே ! நீ வதியும் மரத்தின் ஒரு பக்கத்தில் என் பக்தி சேர்ந்து விட்டது இறைவனே !

**(திருப்பாணார் தலை மறைதல்)**

உலோ : என் சுமை குறைகின்றதே இறைவனே !

திரு : வேங்கடவனே ! மதில்சூழ் இறைவனே ! மனித வாரைமுனி, தேவர்கள் மற்றும் மக்களின் மனதில் வதியும் தேவ தேவனே ! பிரம்மா பிறக்கும் நாடியின் ஒளி, அதுவே என் உயிராகும். ஆனந்தத்தில் இதயம் ஊஞ்சலாடி உன்னிடம் அழைத்துக் கொண்டுள்ளது தந்தையே

(திருப்பாணர் மார்புபாகம் மறைதல்)

உலோ : மஹரிஷி ! மஹாத்மா !! மஹாபக்தனே !!! எங்கள் கண்களில் வாழும் தபசியே ! நீங்கள் எவ்வளவு புண்ணியம் செய்தவர்கள்

திரு : கடல் வண்ணனே ! இராவணசுரனை அழித்த பாணம் பொருந்தியவனே ! பலமான போர் வீரர்களைக் கொண்டு இலங்கையை வென்றவனே ! இலங்கை அரசனை அழித்தவனே ! ஸ்ரீ ரங்க பிரபுவே. சுந்தரனே ! தங்கள் அலங்காரம் என் உயிரின் மூல அறிவினை வசீகரம் செய்கின்றது இறைவா !

உலோ : என்ன என் சுமை இப்படிக் குறைந்து விட்டதே. இது என் சுமையா ? அல்லது திருப்பாணரின் சுமையா ? குறைந்தது எது ? இது என்ன மாயை.

தேவ : மஹாகவி உன் தலை எங்கே ? உன் கழுத்து எங்கே எங்கே உன் வார்த்தைகள் ?

திரு : உன்னை நேசத்துடன் நான் பார்த்ததால் என் பாவங்களை கழுவி விட்டாய் நீ எம்பெருமானே ! என் இதயக்கோயிலை கர்ப்பக் கோயிலாகச் செய்து கொண்டாய். இந்தக் கோயிலை எவ்வாறு மனதில் இருத்தி வைப்பேன். நான் அறிவில்லாமலும் மூடனாகவும் இருக்கின்றேன் எவ்வாறு கடின, விசிஷ்ட தவசு செய்வேன். இலக்குமியை யொத்த அழகுயை துளசி மாலையை மார்பில் தரித்துள்ளாய் ! எம்பெருமான தங்களின் வசீகர ஒளி என்னைத் தாசனாக, தாசனுக்குத் தாசனாக செய்து விட்டது இறைவா.

வேத : உன் மார்பு பாகத்தில் இருந்த சரீரம் என்ன ஆனது திருப்பாணரே ! உனக்கு எங்கள் வார்த்தை கேட்கவில்லை என நினைக்கின்றோம். எங்களுக்கு உமது வாக்கு அமுத சுகமாக உள்ளது

உலோ : ஸ்ரீரங்க ரங்கா உன் பாதம் முதல் இடுப்பு வரையில் இதென்ன ஒளி இறைவனே !

திரு : எல்லா பர்வதங்களையும், உலகங்களையும், பாவங்களாகிய விஷத்தையும் பிரளய காலத்தில் விழுங்கின துரையே ! நான் என்ன பித்துப் பிடித்தவனா ? வண்டுகள் ரீகாங்கரம் செய்யும் நந்தன வனத்தில் இருக்கும் இறைவனே ! ஸ்ரீரங்கனே ! ஈஸ்வரன் கொடுத்த வரத்தைப் பெற்றவர்கள் செய்த பாவத்தை அழித்தவனே ! உன் அழகை, உன் குரல் அழகை என்னென்று சொல்வது இறைவனே !

உலோ : உன் திருப்பாணரை உன்னிடத்தில் சேர்த்துக் கொண்டாயா இறைவனே !

திரு : ஆதிசேடனைப் பாயாகக் கொண்டவனே ! ஸ்ரீரங்கத்தில் இருக்கும் தந்தையே ! துளசி மாலையால் ஒளி பெற்று விளங்கும் கடல் வண்ணனே ! சங்கு சக்கரம் தரித்தவனே உன்னைவிட விசித்திரமானவன் யார் உள்ளார் ! உன் உதட்டில் தோன்றும் ஒளி எனக்கு மோட்சத்தை வழங்குகின்றது. இறைவனே !

வேத : திருப்பாணரே ஸ்ரீ ரங்கநாதனைக் கண்ணாரக் கண்டு கொண்டீரா. இவ்வளவு காலம் இறைவனைக் காண வேண்டும் எனும் ஆசை தீர்ந்து விட்டதா ? காலிலிருந்து தலைவரை தரிசனம் செய்து கொள்

தேவ : திருப்பாணர் நோக்கு எம்பெருமானின் பாதத் தாமரையில் சேருவது எவ்வளவு விசித்தரம்.

திரு : இரணியனை அழித்தவனே ! தேவர்களைக் காப்பவனே ! அனைத்திற்கும் மூலமான இறைவனே ! பவித்திரமானவனே ! பரமாத்மாவே ! சிவப்பு வரிகள்

பொருந்திய உன்னிரு நீளக் கண்கள் என்னை கைதியாக்கி விட்டது பிரபு.

**(திருப்பாணன் காணவில்லை)**

உலோ : உலக ரட்சகனே ! திருப்பாணரை உன்னில் சேர்த்துக் கொண்டாயா ? தலைவனே !

தேவ : வேத வேத்தியா திருப்பாணர் ஸ்ரீரங்கன் உள்ளே ஐக்கியமாகி விட்டார். இந்தப் பக்தனின் கண்கள் இறைவனின் பாதத்தில் சேர்ந்து விட்டது.

வேத : தேவதத்தா ! ஸ்ரீ ரங்கநாதன் உள்ளே திருப்பாணர் தலைகீழாக ஐக்கியமாவது விந்தையே.

திரு : விவரிக்கவியலாத அழகுடன் வைரம் வைடூரிய மாலைகளுடனும் பூசைவரிசை களுடனும் ஆதிசேடன் பாம்பின் மேல் விளங்கும் எந்தையே ! திருவரங்கத்தை அலங்கரித்து விளங்கும் தந்தையே ! ஏழு உலகங்களையும் விழுங்கிய வடபத்ர சாயியே ! தெய்வ பாலகனே ! உன் நீலவர்ண உடலால் என் எண்ணங்கள் நிறைந்த தேவனே !

உலோ : திருப்பாணா ! நீ என்தோள்மேல் ஏறிக் கொண்டு இறங்காது உன் இறைவனைச் சேர்ந்து விட்டாய் இல்லையா ?

வேத : தேவனே ! ஸ்ரீ ரங்கநாதனே ! திருப்பாணரை உன்னுள்ளே சேர்த்துக் கொண்டு விட்டாயா ! பிரபுவே!

தேவ : பகவான் திருப்பாணன் நீ எங்களுக்குக் காணவில்லை. வார்த்தைகள் மட்டுமே கேட்டுக் கொண்டே இருக்கின்றது. மனிதன் இல்லாத சொல், உருவம் இல்லாத சப்தம் நல்லொலியாகும். ஆன்மாவின் நினைவில் இருக்கும் நிரந்தரமான ஒளியாகும்.

திரு : வாய் நிறைய வெண்ணெய் உருண்டை- கடல் - வண்ணன்- கோபாலன் - புடவைத் திருடன் - என்

இதயத் திருடன் - ஸ்ரீ ரங்க ரங்கனே - என் தந்தையே - என் அண்ணனே ! என் கண்ணனே ! ஸ்ரீ மஹாவிஷ்ணுவே என் இறைவனே ! எந்தையே உன்னைப் பார்த்த கண்கள் வேறொன்றினைக் காணாது தந்தையே ! உன்னைப் பார்த்த கண்கள் வேறொன்றினைக் காணாது. உன்னைப் பார்த்த கண்கள் மற்றொன்றினைக் காணாவே.

தேவ : ஸ்ரீ ரங்கநாதனே ! மனிதனை இறைவன் தன்னுள் சேர்த்துக் கொள்வதை எங்களுக்குக் காட்டினாயே ! அதுவே சுகம் ! அதுவே சாந்தி ! அதுவே மகிழ்ச்சி.

வேத : திருப்பாணரே மனிதனே மாதவனான உன் வாழ்க்கை நிகழ்ச்சி எங்களுக்குப் போதித்ததை நாங்கள் கண்டு பாக்கியவான்களானோம்

உலோ : திருப்பாணருக்குஉன்உடம்பில்இடமளித்ததிருவரங்கனே! புண்ணியனே ! உன் விருப்பமான கடவுளைச் சேர்ந்த திருப்பாணரே - நீ புண்ணியம் செய்தவன். இதுவா உன் லீலை திருவரங்க நாதா ? புதிய சூரியனைப் போன்று ஒளி பெற்று விளங்கும் இறைவனே ! சரணம். திருப்பாணாழ்வார்- புண்ணிய ஆன்மா ஆவார். நமோ ஸ்துதே ! நமோ ஸ்துதே !!

புண்ணிய ஆன்மா திருப்பாணாழ்வார்

தெய்வ ஆன்மா திருப்பாணாழ்வார்

தர்ம ஆன்மா திருப்பாணாழ்வார்

மண்ணிலே பிறந்து மனிதரில் உயர்பதவி பொருந்தி
சத்யம் என்ன ? தர்மம் என்ன ? சர்வ ஆன்மாவின்
தத்துவம் என்ன ?
மண் மணியாக ஒளிர்ந்ததுபோல காடு வனமாக
மாறியதற்கு
முறை என்ன ? வழி என்ன ? தீர்த்தமாடும் மக்களின்
தீட்சை என்ன ? (புண்ணிய)
மனிதனாவனே இன்று உயர்சக்தியாக மாறினான்
தீண்டத்தகாதவனே முனியை வாகனமாக மாற்றினான்

மனிதத் தன்மையைப் பூமி இன்று மாதா தத்துவமாக மாற்றியது

தத்துவம் என்ன ? நித்தியம் என்ன ? சர்வ உலக சக்தி என்ன ? (புண்ணிய)

அனைத்தும் இருந்தும் முனிவருக்குக் கிடைக்காமல் போனது என்ன ?

எதுவுமில்லா பைத்தியக்காரன் பெற்ற சக்தி என்ன ?

இதுவே உற்பத்தியின் லீலை, இதுவே தர்மத்தின் வளர்ச்சி

இதுவே தத்துவத்தின் வளர்ச்சி, உலக வழியின் வெளிச்சம் (புண்ணிய)

பக்தனின் வேதனையைப் பார்த்து
சக்தி இறைவன் விசேஷ சாந்தமுடன்
உயர்ந்த நீதியைச் சிறந்த வழியில்
பக்தனின் துயரைத் தீர்த்தவன்

யார் மக்களின் நன்மைக்காப் பிரார்த்தனை செய்தானோ

யார் ஆன்மாக்களுக்கு உய்வுதேவை என அர்ச்சனை செய்தானோ

யார் சமமான நோக்கை நிலவுலகில் ஏற்படுத்தினானோ

அவனே பக்தன், அவனே தேவன், அவனே மனிதன்.

தீட்சை பெற்ற நாள் புண்ணியம் கையில் கிடைத்த நாளாகும்

பக்தி கிடைத்ததால் கையில் சுவர்க்கம் கிடைக்கும்

தவம் செய்தனின் தர்மத்தின் தலைவனின்

பூசையினால் நிலம் ஒளிபெற்று விளங்கும்

குலம் கோத்திரம் எனும் பேரில் கத்தும் ஜாதி

வளர்ச்சி பெறாது விசாலமான இதயத்தை வளர்க்காது

உயர்வினால் உயர்ந்து செல்ல வேண்டிய ஜாதி

தாழ்வினால் வாழ்க்கை இழந்தது; அமைதி இழந்தது

நீதி நியமங்கள் பேரினால் சாதி அன்று

துண்டு துண்டாய்ப் பிரிந்து பரிதாப நிலை பெற்றது

ஜனங்கள் அனைவரும் ஒன்றாய்க் கூடி வாழ

விடிவுகாலத்திற்காக பிரார்த்தனை செய்வோம்

பரமாத்மாவின் ஒளி பார்க்க முடியுமா ?
பவித்திரமான நோக்கு நம்மீது இல்லாவிட்டால்
வீட்டுத் தெய்வத்தின் அழகு பார்க்க முடியுமா ?
தத்துவ சிந்தனை ஒளி நம்மீது படாவிட்டால்
வீட்டுத் தெய்வத்தின் அழகு பார்க்க முடியுமா ?
தத்துவ சிந்தனை ஒளி நம்மீது படாவிட்டால்
பகவானின் பரிபூரண வளர்ச்சி கிடைக்குமா ?
பரலோக சக்தி நம்மைக் காப்பாற்றா விட்டால்
தெய்வ சந்நிதியின் திவ்ய குணங்கள் கிடைக்குமா ?
நேசம் எனும் பெரியநிதி கிடைக்காவிட்டால்
சர்வ உலக உயிர்களை யார் சமமாகப் பார்க்கின்றானோ
அவனே புண்ணியவான் அவனே மனத் தீபம்
சர்வம் சமம் என யார் வேண்டு கின்றானோ
அவனே புண்ணியம் செய்தவன்; அவனே ஆன்ம ஜோதி

**திரையில்**

**கட்டுரை**

இந்தத் திருப்பாணன் பிரகாசமே பூமியில் நிலையாக
திருவரங்க நாதன் ஒளிர்ந்தது போல நின்று
சர்வ மானிடர்க்கு அச்சக்தியை அளித்து
பிரதிநிதிகள் மக்களை நீடூழி காப்பாற்றுவாராக



Prof. Kolakaluri Enoch (1939) hails from an underprivileged family of Vejendla, Guntur dt. Unprecedented in his community, he rose to the positions of Professor of Telugu, Sri Krishnadevaraya University, Anantapur and then attained the coveted post of Vice-Chancellorship of Sri Venkateswara University, Tirupati, the duties of which he has performed with remarkable ease and dignity.

In his literary activity, spanning about five decades, he has written 39 works consisting of poetry, shortstory, novel, play, essay and literary criticism besides his research at doctoral and post doctoral level and subsequently he has completed 15 research projects and guided 42 scholars for Ph.D., and M.Phil., degrees.

As a social activist, he has concern for the common man, the untouchable and the woman and he has hoped to see them as equals to others in all matters, social, political and economic through his writings which are varied, versatile, prolific and stirring.

He travelled widely in India and abroad. Some of his writings were translated into English, Hindi, Tamil and Kannada, besides his original English writings. There has been widespread research on various aspects of his works in Indian Universities.

A recipient of many awards, prizes and honours, Prof Enoch has received A.P. Sahitya Akademi awards for **Vurabavi** (shortstory 1985) **Munivahanudu** (play 1987) and **Principle of Modern Literary Criticism** (1998) and he has been a member of numerous literary and learned bodies including Sahitya Akademi, New Delhi.

